# லாயிட்ஸ் சாலையில் கலகலப்பு; அறிவாலயத்தில் இறுக்கமான அமைதி!

"கடந்த பதினைந்து நாட்களாக லாயிட்ஸ் சாலையில் தேர்த் திருவிழாவோ என்று எண்ணும் அளவுக்குக் கூட்டம் கூடுகிறது. ஜூஸ், தர்பூஸ் பழம், ஐஸ் மோர் விற்பவர்களுக்குக் கொண்டாட்டம்தான். "இனசரி வியாபாரம் நூறு ரூபாய்க்குக் குறைவில்லை" என்கிறார் ஐஸ் மோர் விற்கும் தனசேகரன். "எல்லாம் அம்மாவால் தாங்க" என்கிறார் தர்பூஸ் விற்கும் மங்களமூர்த்தி. ஆம்! லாயிட்ஸ் சாலையில் உள்ள அ. தி. மு. க. தலைமை நிலையத்தில், தேர்தலில் போட்டியிட விரும்பும் நபர்களோடு நேர்க்காணல் நடத்துகிறார் ஜெயலலிதா. தமிழகத்தின் பட்டிதொட்டிகளிலிருந்து தொண்டர்கள் வந்து குவிகின்றனர். இதுவரை 94 லட்சம் ரூபாய் வசூல் செய்திருக்கிறார் ஜெ.

பாராளுமன்றத் தொகுதிகளில் இன்னமும் தொகுதி உடன்பாடு எதுவும் காங்கிரஸ் கட்சியுடன் ஏற்படாத நிலையில் அ.தி.மு.க. தொண்டர்கள் எல்லாத் தொகுதிகளுக்கும் போட்டியிட மனுக் கொடுத்திருப்பது, காங்கிரஸ்காரர்களுக்குக் காபரா அளித்திருக்கிறது. அதை மறைத்துக் கொண்டு, "எல்லாம் ராஜீவ் பேச்சு வார்த்தையில் சரியாகி விடும்" என்கிறார் ஒரு காங்கிரஸ் பிரமுகர்.

லாயிட்ஸ் சாலைக்கு நேர்மாறாக இருக்கிறது அறிவாலயத்தின் சூழ்நிலை.















இங்கே கட்டுப்பாடான தொண்டர்கள். எந்த ஓர் ஆரவாரமும் இல்லை. சொல்லப் போனால் ஒரு இறுக்கமான அமைதி நிலவுகிறது. தொண்டர்கள் ரகசியம் பேசுவது போல்தான் ஒருவரோடு ஒருவர் பேசுகிறார்கள். கலைஞர் நேர்க் காணலை நடத்துகிறார். கலைஞருக்கு உள்ள அனுகூலம் என்னவென்றால், தி. மு. க. சார்பில் போட்டியிட விரும்பும் முக்கியஸ்தர்களை அவருக்கு நன்றாகவே தெரியும் என்பது தான். ஆகவே நேர்க்காணல் என்பது ஒரு சடங்குதான்.

தமிழகம், பாண்டியில் மொத்தம் உள்ள 40 தொகுதிகளில் ஜெ. இந்த முறை 18 இடங்களைக் காங்கிரஸிடம் கேட்கிறார். இதற்குக் காரணம் மத்தியில் எந்தக் கட்சி ஆட்சிக்கு வந்தாலும், மெஜாரிட்டி பிரச்னை வரும் போது தமது குரல் எடுபட வேண்டும் என்ற அவருடைய விருப்பம். இது போதாதென்று சு. சுவாமி வேறு மூன்று இடங்களை ஜெ.விடம் கேட்கிறார். ஆனால் ஜெ. 'உங்களுக்கு வேண்டுமானால் ஒன்று வாங்கிக் கொள்ளுங்கள். கட்சி பற்றி எதுவும் பேச வேண்டாம்' என்றவுடன், வாயை மூடிக் கொண்டு வந்த வழி சென்றார் சுவாமி! திண்டுக்கல் அல்லது தென் சென்னை தொகுதி சுவாமிக்குக் கிடைக்கலாம்.

இந்த முறை வைஜயந்தி மாலாவுக்குத் தென் சென்னையில் ஸீட் தரக் கூடாது என்பதில் காங்கிரஸ்காரர்கள் தீவிரமாக இருக்கிறார்கள். ''எனக்கு மட்டும் ஸீட் தராமல் இருக்கட்டும். மத்திய பம்பாய் தொகுதியில் எதிர்க் கட்சி சார்பில் நின்று வெற்றி பெற்றுப் பாராளுமன்றத்துக்கு வருகிறேன் பார்' என்று திருமதி. பாலி சொல்லிக் கொண்டிருக்கிறாராம்! தென் சென்னையில் யார் போட்டி போட்டாலும் கடுமையான எதிர்ப்பு காத்திருக்கிறது. தி. மு. க. சார்பில் ஓய்வு பெற்ற நீதிச் செயலாளர் குகனோ அல்லது மாறனோ போட்டியிடலாம். சென்ற முறை தி. மு. க. சார்பில் இங்கு போட்டியிட்ட ஆலடி அருணா இந்த முறை வட சென்னையைக் கேட்கிறார். இதனால் சோமு மத்திய சென்னைக்கு மாற்றப்படலாம்.

காங்கிரஸ் சார்பில் சென்ற தடவை வெற்றி பெற்றவர்களே மீண்டும் போட்டியிட வேண்டும் என்று மேலிடம் சொல்லி விட்டதாம். ஆனால் இ. காங்கிரஸ் தொண்டர்கள், ''இரண்டு முறைக்கு மேல் வெற்றி பெற்றவர்களே மறுபடி, மறுபடி போட்டியிட்டால், இளைஞர்கள் எப்போது தான் முன்னணிக்கு வருவது?'' என்று கேட்கிறார்கள். மயிலாடுதுறையில் பக்கீர் முகமது இறந்து விட்டதால் அந்த இடத்தில் ராஜீவின் நண்பர் மணிசங்கர அய்யர் போட்டியிட விருப்பம் தெரிவித்திருக்கிறார். தொகுதியில் உள்ள கட்சிக்காரர்கள் கடுமையாக எதிர்க்கின்றனர்.

தி. மு. க. அணியில் சென்ற முறை ஜனதா தளத்துக்கு நாகர்கோயில், கிருஷ்ணகிரி தொகுதிகள்தாம் கொடுக்கப்பட்டன. இந்த முறை, வேலூர், அரக்கோணம், கடலூர் தொகுதிகளைக் கூடக் கேட்கிறார்கள். சென்ற முறை இந்தக் கூட்டணியில் ஒண்ணே ஒண்ணு, கண்ணே கண்ணு என்று வெற்றி பெற்றவர் நாகப்பட்டிணம் தொகுதி சி. பி. ஐ. வேட்பாளர் செல்வராசு. இப்போது மூன்று இடங்களாகக் கேட்கிறார்கள் சி. பி. ஐ.க்காரர்கள். சி. பி. எம் ஐந்து இடங்களைக் கேட்கிறது. ஆக மொத்தம் கூட்டிக் கழித்துப் பார்த்தால், தி. மு. க. குறைந்தது 30 பாராளுமன்றத் தொகுதிகளில் போட்டியிடும்.

சிவகாசி தொகுதியில் பெ. சீனிவாசன் போட்டியிட விருப்பம் தெரிவித்தாலும் தலைமைக்கு இஷ்டமில்லை. இந்தத் தொகுதியில் சென்ற முறை காளிமுத்து அ.தி.மு.க. சார்பில் நின்று வென்றார். இப்போது அவர் கட்சி தாவிச் சட்டமன்றத்துக்குப் போட்டியிட இருக்கிறார். காளிமுத்துவிடம் தோற்ற கோபால் சாமியோ மறுபடி போட்டி போட்டுத் தோற்க விரும்பவில்லை. இப்படியே பார்க்கப் போனால், பல தி. மு. க. வினர், கட்சியின் கண்ணியத்தைக் காப்பாற்றுவதற்காகப் போட்டியிடக் கட்சியிடம் மனுத்தாக்கல் செய்திருந்தாலும் ஓர் உற்சாகத்துடன் செய்யவில்லை என்பது பளிச்சென்று தெரிகிறது.

— தில்லப்பா

''தீபாவளிக்குத் துணிமணி எடுத்துக் கொடுக்கிறேன்னு, என் மாப்பிள்ளை கிட்டே சொன்னது தப்பாப் போச்சு...''

''ஏன், என்ன ஆச்சு, இப்போ...?''

''துணி எடுத்துக் கொடுத்திங்களே, மணி எங்கேன்னு கேட்டுத் தகராறு பண்றார்...''

— சிறுமுகை ஜி. கதிரேசன்.



# சென்னைப் பெருநகரில் பெருகிவரும் கொள்ளைகள்!

**தூ**ங்கிக்கொண்டிருந்த பாங்க் ஆபீசர், சௌந்தரராஜனின் வீட்டுக் கதவு தட்டப்படும் சப்தம் கேட்ட போது இரவு மணி இரண்டு இருக்கும். கண் விழித்து, என்ன விஷயமென்று பார்க்க முற்பட்ட போது நான்கு பேர் ஆயுதங்களுடன் முன்னே நின்றார்கள். சப்தம் போட்டால் உயிருக்கு உத்தரவாதமில்லை என்று மிரட்டினார்கள்! சௌந்தரராஜன் குடும்பத்தினர் எவ்வித மான எதிர்ப்பும் காட்டவில்லை! அவர்கள் மௌனமாய் நின்று கொண்டிருக்க, பீரோ, மேஜை, என்று ஒன்று விடாமல் துருவித் துருவி, அகப்பட்டதை எல்லாம் எடுத்துக் கொண்டனர் லுங்கி, சட்டை அணிந்து வந்த அந்த நான்கு நபர்களும், ஏழு பவுன் சங்கிலியில் தொடங்கி, மேஜை மீது வைத்திருந்த பர்சில் இருந்த எழுபது ரூபாய் வரை ஒன்றையும் விட்டு வைக்கவில்லை அந்தக் கொள்ளைக்காரர்கள். சுமார் ஒரு மணி நேரம் போல அவர்கள் அந்த வீட்டில் சரளமான தமிழில் பேசியபடி வளைய வந்து கை வரிசையைக் காட்டினார்கள். திடீரென வீட்டுக்கு வெளியே நாய்கள் சில குரைக்கிற சப்தம் கேட்டதும், உஷாராகி, கொள்ளையடித்த பொருட்களுடன் கம்பி நீட்டினார்கள்.

**இ**ந்தக் கொள்ளை பற்றிப் புலன் விசாரணை செய்து வரும் சிட்லபாக்கம் காவல் நிலையத்தில் கேட்ட போது, "முயற்சி செய்து கொண்டிருக்கிறோம் இன்னும் குற்றவாளி பிடிபடவில்லை. எப்படியும் பிடித்து விடுவோம் என்றார்கள். இந்தப் பகுதி சென்னை நகர போலீஸின் எல்லையைத் தாண்டி உள்ள பகுதி.

**மை**லாப்பூரில், மேல் தட்டுக்காரர்கள் வசிக்கும் பகுதியில் அந்த வங்கியின் உயர் அதிகாரிக்கு வீடு. அந்தப் பெண் அதிகாரியின் கணவருக்குப் பம்பாயில் வேலை. ஸ்கூலில் படிக்கும் மகனுடன் தனியாய் வசித்து வருகிறார்.

"அந்த சம்பவத்தை நினைத்தாலே...." என்று அவர் நினைவு கூறும்போதே முகத்தில் பய உணர்ச்சி பிரதிபலிக்கிறது.

ஒருவரல்ல, இருவரல்ல ஏழு பேர்கள்! இவ்வதிகாரியின் வீட்டின் பின் பக்கக் கதவு வழியே உள்ளே நுழைந்து, வீட்டையே சூறையாடி விட்டார்கள்.

"நான் ஏழு ஆண்களை எதிர்ப்பது துளியும் சாத்தியமில்லை என்பதால், அவர்களைத் தடுக்கவோ, எதிர்ப்பு தெரிவிக்கவோ முயற்சியே செய்யவில்லை."

அந்தக் கொள்ளையர்களும், ரொக்கமாய்ப் பணம், நகைகள், விலை உயர்ந்த துணிமணிகள் என்று பல்லாயிரக்கணக்கான ரூபாய் மதிப்புள்ள பொருட்களைக் கொள்ளையடித்ததோடல்லாமல், சமையலறைக்குச் சென்று ஆம்லட் தயாரித்து சாப்பிட்டு விட்டுப் போயிருக்கிறார்கள்! சென்னை நகரில், கொள்ளையர்கள் எத்தனை தைரியமாய்ச் செயல்படுகிறார்கள் என்பது அதிர்ச்சியூட்டுகிறது.

**அ**டையாறில் வசிக்கும் வயதான தம்பதி — வைத்தியநாதன் (80) பாகீரதி (75)



ராஜு, சாகுல் ஹமீது, ஸ்ரீனிவாசன், அசோக் என்ற நான்கு மாணவர்களையும் போலீஸ் கைப்பற்றி விசாரித்த போது, 'மைக்கேல் மதன காமராஜன்' படம் பார்த்தபின் தான் இப்படிக் கொள்ளையடிக்க யோசனை தோன்றியதாகச் சொன்னார்கள்!



ராஜசேகரன் நாயர்

வீட்டில் நடந்துள்ள சம்பவம் கொடூரமானது.

முதிய தம்பதிகள் தனியாய் வசிப்பதைக் கண்காணித்து அறிந்த அடையாறு பள்ளிக்கூட மாணவர்கள் நான்கு பேர். மாலை நேரத்தில் வைத்தியநாதனின் வீட்டுக்கு வந்திருக்கிறார்கள். வீட்டின் பின்புறம் காயப் போட்ட துணிகளை எடுக்க வந்த வைத்திய நாதனைக் கட்டையால் தாக்கி நினைவிழக்கச் செய்து விட்டு, வீட்டினுள் புகுந்து அவருடைய மனைவியையும் மண்டையில் அடித்து மயக்கமுறச் செய்து விட்டு, ம. வி. யின் வால்யூமை அதிகரித்து விட்டு, தங்கள் கை வரிசையைக் காட்டியிருக்கிறார்கள். ஆனால், சம்பவம் நடந்த சில தினங்களுக்குள்ளாகவே, ராஜு, சாகுல் ஹமீது, சீனிவாசன், அசோக் என்ற நான்கு மாணவர்களையும் மதுரையில் பிடித்து விட்டார்கள் போலீசார். விசாரணையின் போது, அந்த மாணவர்கள், 'மைக்கேல் மதன காமராஜன்' படம் பார்த்த பின்தான் தடியால் அடித்து, மயக்கமுறச் செய்து விட்டு கொள்ளையடிக்கலாம் என்ற யோசனை தோன்றியதாகச் சொன்னார்கள்! மாணவர்கள் கொள்ளையடித்த சுமார் ரூபாய் ஐம்பதாயிரம் மதிப்புள்ள பொருள்களில் பெரும் பகுதி மீட்கப்பட்டு விட்டதாகத் தெரிவிக்கிறது போலீஸ் செய்தி. கொள்ளையடிக்க வந்த மாணவர்கள், வீட்டில் இருந்த உணவைச் சாப்பிட்டு விட்டுப் போயிருக்கிறார்கள்!

இவை தவிர அடையாறு நீதிபதி வீட்டில் கலர் ம. வி. திருட்டு, அமைந்தகரை சியாமளா சுப்பிரமணியம் வீட்டில் ரூபாய் இருபதாயிரம் மதிப்புள்ள பொருட்கள் கொள்ளை, கோடம்பாக்கம் ஹோட்டல் அதிபர் வீட்டில் கொள்ளையடிக்க முயற்சி என்று செய்தித்தாள்களில் திருட்டு, கொள்ளை பற்றிய செய்திகள் வந்து கொண்டே இருக்கின்றன. அதிலும் அண்மைக் காலத்தில், இவ்வாறான செயல்களின் எண்ணிக்கை வெகுவாய் அதிகரித்துள்ளது. நிலைமை இப்படி இருக்க, தமிழகத்தின் கவர்னரோ, "தமிழகத்தில் சட்டம் ஒழுங்கு நிலைமை முன்னேறியுள்ளது" என்று கூறுகிறார்!

இது தொடர்பாகக் காவல் துறையினர் என்ன சொல்கிறார்கள்...? கமிஷனர் **ராஜசேகரன் நாயரைச்** சந்தித்துக் கேட்ட போது:

"கிட்டத்தட்ட ஐம்பது லட்சம் மக்கள் தொகை கொண்ட சென்னை நகரத்தில் எந்த குற்றமுமே நடக்காமல் எப்படித் தடுக்க முடியும்? குற்றங்களின் எண்ணிக்கை அதி

இப்படம் 'தலைக்கோல்' அமைப்பு தயாரித்துள்ள 'கருஞ்சுழி' என்ற நாடகத்தில் வரும் ஒரு காட்சி. பாண்டிச்சேரி நாடகப் பள்ளியில் பணி யாற்றும் வ. ஆறுமுகம் எழுதி, இயக்கி யுள்ள இந்நாடகம் விஜயவாடாவில் நடைபெற்ற தென் மண்டல நாடக விழா வில் பங்கேற்று, முதலிடத்தைத் தட்டிக் கொண்டது. தேசிய நாடக விழாவுக்குத் தேர்வு செய்யப்பட்டுள்ளது. வசனங்கள் குறைவாகவும் சைகைகள், அசைவுகள் அதிகமாகவும் இடம் பெற்றுள்ள நவீன நாடகம் இது.

— சி. அண்ணாமலை.



கரித்து வருகிறது. அதே சமயம், நாங்கள் கண்டுபிடிக்கும் கேஸ்களின் எண்ணிக்கை யும் அதிகமாகிக் கொண்டே வருகிறது. உலகப் புகழ்பெற்ற ஸ்காட்லாந்து யார்ட் போலீஸாரின் கண்டுபிடிப்பு விகிதம் (detection rate) முப்பது சதவிகிதம். ஆனால் நமது காவல் துறையினர் கிட்டத்தட்ட அறு பது சதவிகித குற்றங்களில், புலன் விசார ணையை வெற்றிகரமாக முடித்துள்ளனர். சென்னை நகரில், இரவில் ஒரு துணைக் கமிஷனரின் தலைமையில் ரோந்து நடை பெறுகிறது. ரோந்து தீவிரமாக நடப்பதால் தான், சமீபத்தில் கே. கே. நகரில் ஒரு பெண் மணியைக் கற்பழித்தவர்களைப் பிடிக்க முடிந்தது. சம்பவம் நடக்கும் பல இடங் களுக்கு நான் சென்று பார்க்கும் அவசியம் இல்லாது போனாலும் கூட நான் சென்று எனது அதிகாரிகளுக்கு நம்பிக்கை ஊட்டி, வழிகாட்டிக் கொண்டு வருகிறேன்.

''மைலாப்பூர் வங்கி அதிகாரி, அடையாறு வைத்தியநாதன், மற்றும் சிட்லபாக்கம் வங்கி அதிகாரி ஆகியோர் வீட்டில் கொள்ளையடித்தவர்கள் கைது செய்யப் பட்டுள்ளனர். அடையாறு வைத்தியநாத னுக்கு அவருடைய பொருட்கள் திருப்பிக் கொடுக்கப்பட்டு விட்டன. கொள்ளையடிக் கப்பட்ட பொருட்கள் இவ்வளவு விரை வாகத் திருப்பிக் கொடுக்கப்படுவதென்பது வேறு எந்த நகரத்திலாவது நடக்கிறதா?

''திருட்டு, கொள்ளைகள் போன்றவற் றைத் தடுக்க மக்களும் உதவி புரிய வேண் டும். தங்கள் ஏரியாவில் சந்தேகத்துக்கிட மான நபர்கள் சுற்றிக் கொண்டிருந்தால் உடனே போலீஸுக்குத் தகவல் தெரிவிக்க வேண்டும். பகலில், டெலிபோன் ஊழியர், மின்வாரிய ஊழியர் என்று வருபவர்களி டம் அடையாள கார்டு இருக்கிறதா என்று கேட்க வேண்டும். ரயில், பஸ் போன்றவற் றில் பயணம் செய்யும் போது எக்கச்சக்க மாகப் பணம் கொண்டு செல்லக் கூடாது. முன்பின் தெரியாதவர்களை நம்பி பெட்டி யைக் கொடுத்து விட்டு டீ சாப்பிடச் செல்லக் கூடாது. பல்வேறு நகர்களில் உள்ள நலச் சங்கங்கள் இரவு ரோந்துப் பணியை மேற்கொள்ளலாம். போலீஸார் முழு உதவி செய்வார்கள். இது தவிர வீட்டைப் பூட்டிக் கொண்டு, பத்து, பதி னைந்து நாட்கள் வெளியூர் போகிறவர்கள், போலீஸ் ஸ்டேஷனில் சொல்லி விட்டுப் போனால், நாங்கள் பாதுகாப்புக் கொடுக் கிறோம். மாலை டீ. வி. பார்க்கும் போது மட்டுமின்றி பொதுவாக எப்போதுமே வெளிப்புறக் கதவுகள் எல்லாவற்றையும் தாள் போட்டு சாத்தி வைக்க வேண்டும்.

''இந்தியாவின் இதர நகரங்களில் நடக் கும் குற்ற விகிதங்களைப் பார்க்கும் போது சென்னை எவ்வளவோ மேல் என்று சொல் வீர்கள். அங்கொன்றும் இங்கொன்றுமாக நடப்பதைப் பற்றிப் பத்திரிகைகள் பரபரப் பாக மிகைப்படுத்திச் செய்திகள் வெளியிடு கின்றன. பத்திரிகைகள் கொள்ளைகளைப் பற்றிச் செய்திகள் போட வேண்டாம் என்று சொல்லவில்லை. பரபரப்புக்குப் பலியாக வேண்டாம் என்று தான் கேட்டுக் கொள் கிறேன். கொள்ளையைப் பற்றிப் பெரிதா கப் போடுகின்ற அதே சமயம், நாங்கள் விரைவாகக் கண்டுபிடித்த தகவலை யும் அதே முக்கியத்துவத்துடன் போடுங் கள் என்றுதான் சொல்கிறேன்.''

**— சந்திரமௌலி; ப்ரியன்.**

படம்: **சுபா.**

(இந்தக் கட்டுரை அச்சேறும் தருணத்தில் அண்ணா நகரில் இரு பெண்களைக் கொலை செய்துவிட்டு வீட்டைக் கொள்ளையடித்த செய்தி வெளியாகி யிருக்கிறது. — ஆ-ர்)



* கிரிஸ்டபெல்
(அட்டைப்பட...)



* லாவண்யா
...(அழகிகள்)

# மாடலிங் தொழிலில் மிஸ் இந்தியா

'விளம்பரங்களுக்கு மாடல் செய்யும் தொழிலெல்லாம் நமக்கு ஒத்துவராது. அந்தத் துறையில் நுழைந்து விட்டால் கௌரவத்தைக் காப்பாற்றிக் கொள்ள முடியுமா என்பதே சந்தேகம்தான்...!'

— எல்லா சராசரிப் பெண்களையும் போல கிரிஸ்டபெல்லும் இப்படித்தான் கூறி வந்தார் – சில நண்பர்கள் அவரைக் கட்டாயப்படுத்தி ஒரு விளம்பரத் தயாரிப்பை நேரில் காணச் செய்யும் வரை. அந்த விளம்பரத் தயாரிப்பில் மாடல்கள் கௌரவமாக நடத்தப்படுவதைப் பார்த்தார். தொழில் முறை மாடலிங், சுறுசுறுப்பும் உற்சாகமும் நிறைந்த துறை என்பது புரிந்தது. மெல்ல அந்தத் துறையில் அடியெடுத்து வைத்தார். படிப்படியாகத் தன்னம்பிக்கை வளர்ந்தது. அழகிப் போட்டிகளில் பங்கேற்றார். சென்னை நகரப் பெண்களிடையே இரண்டாவது இடத்தைப் பெற்றார். பம்பாயில் நடந்த அனைத்திந்திய அளவிலான போட்டியில் மிஸ் இந்தியாவாகவே தேர்வு செய்யப்பட்டார்!

கிரிஸ்டபெல்லைச் சந்தித்த போது, 'பெண்களின் அழகைப் பயன்படுத்திச் சம்பந்தமில்லாத பொருள்களை விளம்பரம் செய்வது சரியா?' என்ற கேள்வியை எழுப் ?னோம்.

''அதில் என்ன தவறு இருக்கிறது...?. பெண்களிடம் தனியான அழகும் ஒயிலும் இருக்கத்தான் செய்கின்றன. அழகுணர்ச்சி என்ற கண்ணோட்டத்தில் விளம்பரங்களை நீங்கள் பார்க்க வேண்டும்... விளம்பரங்களில் பெண்களைப் புகுத்துவது அவர்களைப் போகப் பொருளாகக் கருதுவதற்கு ஒப்பாகும் என்ற வாதம் இன்று செல்லுபடியாகாது. எவ்வளவோ விளம்பரங்களில் வயதான பெண்களும், ஆண்களும், குழந்தைகளும்... ஏன் நாய்க்குட்டி போன்ற விலங்குகளும் கூட பயன்படுத்தப்படுகின்றன'' என்றார் கிரிஸ்டபெல்.

''நீங்களே ஆரம்பத்தில் மாடலிங் துறைக்குள் நுழையத் தயங்கினீர்கள். இன்னமும் இத் துறைக்கு வர ஏராளமானவர்கள் தயங்கத்தான் செய்கிறார்கள்... இத் தயக்கமும் அச்சமும் அவசியமற்றது என்கிறீர்களா?''

''ஒருசில பெண்கள் கண்ணியக் குறைவாக நடந்து கொள்வதால்தான் எல்லோருமே பயப்படுகிறார்கள். ஆனால் உண்மையில் பயப்பட வேண்டிய அவசியம் கிடையாது. தன்னம்பிக்கையும் துணிவும் சரியான குறிக்கோளும் இருந்தால் நம்மை யாரும் தவறாகப் பயன்படுத்திக் கொள்ள முடியாது; எந்த ஆபத்தும் வராது'' என்றார் மிஸ். இந்தியா.

சென்னை நகரின் சிறந்த அழகியாக முதலிடத்தைக் கிரிஸ்டபெல்லிடமிருந்து தட்டிக் கொண்டவர் லாவண்யா. பம்பாயில் நடந்த இறுதிச் சுற்றுப் போட்டியில் கிரிஸ்டபெல் இவரை முந்திக் கொண்டு மிஸ் இந்தியாவானார்!

''என் பெற்றோர் மனமுவந்துதான் என்னை மாடலிங் துறையில் நுழைய அனுமதித்துள்ளனர். கசப்பான அனுபவங்கள் ஏதும் எனக்கு ஏற்பட்டதில்லை'' எனக் கூறும் மிஸ் மெட்ராஸ் (லாவண்யா) மாடலிங் பள்ளியில் சேர்ந்து முறையாகப் பயில விருப்பப்படுகிறார். தற்போது இவர் பதினோராம் வகுப்பு மாணவி.

இவ்வாண்டு ஃபெமினா — லக்ஷ்மி மில்ஸ் இணைந்து நடத்திய சென்னை அழகிகள் போட்டியில் முதல் மூன்று இடங்களைப் பெற்ற பெண்கள் மூவருமே Professionals என்ற நிறுவனத்துக்காகப் பணியாற்றுபவர்கள். இந் நிறுவனத்தின் பணி, விளம்பர ஏஜென்ஸிகள் தயாரிக்கும் விளம்பரங்களுக்குத் தேவையான மாடல்கள் முதல் நாற்காலிகள் வரை அசையும் — அசையா பொருட்கள் அனைத்தையும் சப்ளை செய்வதுதான்!

உதாரணத்துக்கு; நவீன சமையலறையில் ஒரு அழகான பெண் சமைக்கிறாள். அவள் குழந்தை ஓடி வருகிறது. குழந்தைக்குப் பின்னால் நாய்க்குட்டி இருக்கிறது... இப்படியொரு விளம்பரத்தைப் படம் பிடிக்க சரியான சமையலறையைக் கண்டுபிடித்து, அங்கு ஷூட்டிங் நடத்த ஒப்புதல் பெறுவது தொடங்கி, குழந்தை, நாய்க்குட்டி என்று ஒவ்வொன்றையும் தேடிக் கண்டுபிடித்து ஒன்று சேர்க்க வேண்டும். பிரதான மாடலைத் தேர்வு செய்து, படம் எப்படி இருக்கும் என்று விளக்கி, கட்டணம் பேசி ஒப்புதல் பெற வேண்டும். எல்லாம் முடிந்ததும் ஆங்காங்கேயிருந்து சேகரிக்கப்பட்ட பொருள்களும் நாய்க் குட்டியும் திருப்பித் தரப்பட வேண்டும்!

சுருக்கமாகச் சொன்னால், ஒரு விளம்பர ஏஜென்ஸியின் கற்பனைக்குக் கலை வடிவம் தரத் தேவையான அனைத்தையும் ஓடியாடிச் செய்வதுதான் Professionals இன் வேலை. இவ்வாறு ஓடியாடுவோரில் முதன்மையானவர் இளைஞர் ஆனந்த். ஆனந்தைச் சந்தித்துப் பேட்டி கண்ட போது சுவையான தகவல்கள் வெளிப்பட்டன.


• ஆனந்த்

கேள்வி: பெரும்பாலான இளைஞர்கள் பாதுகாப்பான வேலைகளைத் தேடிக் கொள்ள விரும்புகையில் நீங்கள் மட்டும் இத் துறையில் துணிந்து நுழைந்தது ஏன்?

பதில்: வித்தியாசமாக ஏதேனும் செய்ய வேண்டும் என்ற உந்துதல்தான் காரணம். ஆரம்பத்தில் நானும் ஒரு தனியார் நிறுவனத்தில் மார்க்கெட்டிங் எக்ஸிகியூடிவ்வாகத்தான் இருந்தேன். ஆனால் திருப்தி இல்லை. பம்பாய், டெல்லி போன்ற நகரங்களில் மாடலிங் நிறுவனங்கள் சிறப்பாகச் செயல்படுவதைப் பார்த்து விட்டு, சென்னையில் ஆரம்பிக்க முடிவு செய்தேன். சென்னையில் மாடல்கள் பெரும்பாலும் வேறு நல்ல வேலைகளில் இருந்து கொண்டு உபரி வருமானத்துக்காகப் பகுதி நேர மாடலிங் செய்கிறார்கள். மாடலிங்கை முழு நேரத் தொழிலாகக் கொள்ள முடியும். அவ்வாறு செய்தால்தான் முழு ஈடுபாடு ஏற்படும் என்பது என் அபிப்பிராயம். இந்தப் போக்கை ஊக்குவிக்க எங்கள் நிறுவனம் விரும்புகிறது.

கே: முழு நேர மாடலிங் செய்ய நிறையப் பெண்கள் இப்போது முன்வருகிறார்களா?

ப: சென்னைவாசிகளுக்கு இன்னமும் இத் துறையைக் குறித்துத் தேவையற்ற சந்தேகமும் பயமும் இருக்கத்தான் செய்கிறது!

கே: நீங்கள் எந்த அடிப்படையில் மாடல்களைத் தேர்ந்தெடுக்கிறீர்கள்?

ப: இதற்குப் பதில் சொல்வது ரொம்பக் கஷ்டம். நாய்க்குட்டி முதல் கிழவர் வரை பலவிதமான மாடல்கள் — ஒவ்வொருவரையும் தேர்ந்தெடுக்கப் பலவிதமான காரணங்களை எடை போட வேண்டும். முக்கியமாக


• மாடல்களில் சிலர்



இளவேனில் மாடல்

எந்த மாடலும் பார்ப்பதற்குப் 'பளிச்' சென்று 'காமெரா களை'யுடன் இருக்க வேண்டும் என்று விரும்புவோம். அதற்கு மேல் விளம்பரதாரர் மற்றும் ஏஜென்ஸியின் நிபந்தனைகளும் பூர்த்தி செய்யப்பட வேண்டுமல்லவா?! எங்கள் நிறுவனத்துக்கு வந்து பதிவு செய்து கொள்ளும் மாடல்களின் புகைப்படங்களை ஆல்பத்தில் வைத்திருப்போம். விளம்பர ஏஜென்ஸியினர் அந்த ஆல்பத்தைப் பார்த்துப் பொருத்தமான நபரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

கே: இந்தத் தொழில் லாபகரமாக இருக்கிறதா?

ப: லாபத்தைக் குவிக்கும் தொழில் என்று சொல்ல முடியாது. சொல்லப் போனால் ஆரம்பத்தில் நஷ்டமே ஏற்பட்டது. மெல்ல மெல்ல விளம்பர ஏஜென்ஸிகளுக்கு எங்களிடம் நம்பிக்கை பிறந்து, அவர்களே எங்கள் நிறுவனத்தில் பதிவு செய்து கொள்ளும்படி மாடல்களை அனுப்பி வைக்க ஆரம்பித்தார்கள். இது ஒரு திருப்புமுனையாக அமைந்தது. ஏஜென்ஸிகள் பெரும்பாலும் 'மிக அவசர' ரக வேலைகளைத்தான் தருவார்கள். நாங்கள் இரவு பகல் பாராமல் ஓடியாடி, தேடி அலைந்து, தேவையான பொருள்கள், இடம், மாடல்கள் யாவையும் சேகரித்து, ஷூட்டிங்கின் போது கூடவேயிருந்து நேரத்தோடு வேலையை முடித்துத் தருகிறோம். இதனால் எங்கள் நிறுவனத்துக்கு நல்ல பெயர் கிடைத்திருக்கிறது. ஏஜென்ஸிகள் எங்களிடம் மொத்தமாகப் பணம் தருகின்றன. நாங்கள் மாடல்களுக்குச் சன்மானம் தருகிறோம்; இதர செலவுகளையும் சமாளிக்கிறோம். தொட்டுத் தொட்டு நிறையச் சில்லறை செலவுகள் இருக்கும் என்பதால் கணிசமான லாபம் காண்பது சிரமம்தான். ஆனால் இத் துறையிலுள்ள சவால்கள் என்னையும் என்னுடன் பணியாற்றும் ராம்கி (இவர் முந்நாள் மாடல்), பாலு, செல்வி மிருணாளினி ஆகியோரையும் ஈர்க்கின்றன. பெரும்பாலும் இளைஞர்களே சேர்ந்து பணியாற்றுவதால் உற்சாகமாகச் செயல்படுகிறோம்.

கே: பெண் மாடல்களைப் பல இடங்களுக்கு அழைத்துச் சென்று படப்பிடிப்பு போன்றவற்றுக்கு உட்படுத்தும் பொறுப்பு பெரிய பொறுப்பல்லவா?

ப: பெரிய பொறுப்புதான். ஆனால் சம்பந்தப்பட்ட மாடலிடம் நாங்கள் முன்கூட்டியே, என்ன விளம்பரத்துக்கு எத்தகைய படம் எடுக்கப் போகிறோம் என்பதை வரைபடமாகவே போட்டுக் காட்டி விடுவோம். அதனால் அவர்களும் எத்தனை நேரம் ஆகும், என்ன மாதிரி 'போஸ்' செய்ய வேண்டும் என்பதையெல்லாம் உணர்ந்த பிறகே பணியை ஏற்றுக் கொள்கிறார்கள். தற்போது சுமார் இருநூறு மாடல்கள் எங்கள் நிறுவனத்தில் பதிவு செய்து கொண்டிருக்கிறார்கள். தங்கள் பாதுகாப்புக் குறித்த அச்சம் இருந்தால் இவ்வளவு பேர் முன்வருவார்களா?

கே: உங்கள் வருங்காலத் திட்டம்...?

ப: மாடலிங் பள்ளி ஒன்று ஆரம்பிக்க வேண்டும் என்பதே எங்கள் இலட்சியம். காமெரா முன் எப்படி நிற்பது, நடப்பது, நடிப்பது, அழகு சாதனங்களை எவ்வாறு உபயோகிப்பது போன்றவற்றைத் தக்க ஆசிரியர்களைக் கொண்டு பயிற்றுவிக்கத் திட்டம். தென்னிந்திய மாடல்கள், சர்வதேச ஃபாஷன் போட்டிகளில் கலந்து கொள்ளும் அளவுக்குத் தகுதியும் தன்னம்பிக்கையும் பெற வேண்டும். இதற்கு இப் பள்ளி உதவும்.

**— பானுமதி ராமச்சந்திரன்**

அட்டை வண்ணப்படம், படங்கள்:
**உத்ரா**



# ஈராக்குடன் ஓர்

வளைகுடா போர் நின்று இரண்டு வாரங்கள் கூட முடிந்திருக்காது. ஜெர்மனியில் ஃபிராங்ஃபர்ட் விமான நிலையம். வி. ஐ. பி. அறை. ஏகப்பட்ட பயணிகள். எல்லோரும் ஃபிராங்ஃபர்ட்டிலிருந்து பாக்தாத் செல்லும் விமானம் புறப்படக் காத்திருந்தனர். ஒவ்வொருவரிடமும் ஒரு பிரீஃப்கேஸ். அவற்றில் நீணியத் நீனிய விலைப் பட்டியல்கள். ஒருவரை ஒருவர் நன்கு அறிந்தவர்களாதலால், இயல்பாகப் பேச ஆரம்பித்தனர்.

''கிராவுஸ்! ஸத்தாமின் முதல்தர வீரர்களான ரிபப்ளிகன் துருப்புக்களுக்கு விஷ வாயு அடங்கிய கைக் குண்டுகளை விற்றாயே, அப்போதான் உன்னைக் கடைசியாகப் பார்த்தது...!''

கிராவுஸ் பெரிதாகப் புன்னகை புரிந்தான். ''இவ்வளவு சீக்கிரம் நாம் பாக்தாதுக்குத் திரும்பிப் போவோம்னு நான் எதிர்பார்க்கவே இல்லை, ஃபிரான்கோய்ஸ்! உன் பெட்டியில் என்ன வைச்சிருக்கே?''

''கனநீருக்கான விலைப்பட்டியல்! பன்னாட்டுப் படையினர் குண்டுவீசித் தாக்கியதில் ஈராக்கின் அணு ஆயுதக் கூடங்கள் தகர்க்கப்பட்டு விட்டன. கனநீருக்கு நல்ல கிராக்கி. அவர்கள் தேவையை எங்களால்தான் பூர்த்தி செய்ய முடியும்!''

''அடேடே! மக்டொனால்டா! வாப்பா, வா! எங்கே, பாக்தாதுக்கா புறப்பட்டுட்டே! ஈராக்குக்கு ஆயுதங்கள் சப்ளை பண்ணி பலப்படுத்துவதில் அமெரிக்கா ஆர்வம் காட்டும்னு நான் நினைக்கவேயில்லே.''

''அதிகாரபூர்வமாகப் பார்த்தால் நாங்க அதில் ஆர்வம் காட்டவில்லைதான். நாங்க M–1 டாங்குகளை ஜோர்டன் நாட்டுக்குத்தான் விற்போம். அந்தத் தேசம் அவற்றை மீண்டும் பாக்தாதுக்கு விற்றால் நாங்க என்ன பண்ண முடியும்?''

ஒரு பிரிட்டிஷ் வர்த்தகர் குறுக்கிட்டார். ''இதப்பாருப்பா! ஈராக்குக்கு டாங்குகள் சப்ளை செய்யும் உரிமை பிரிட்டனுக்குத்தான் வழங்கப்பட்டிருந்தது. ரொம்ப நாளாவே மத்திய கிழக்குப் பகுதிக்கு டாங்குகள் சப்ளை செய்யும் உரிமை எங்களுக்குத்தான் இருந்து வந்திருக்கு. அதில் தலையிடாதீங்க...

அப்போது ஒரு ருஷ்யர் இடைமறித்துப் பேசினார்: ''வளைகுடா போரில் உங்க சீஃப்டன் டாங்குகள் எலுமிச்சம் பழம் மாதிரி நசுங்கிப் போச்சே! அதனால இன்னொரு ஐ. நா. தீர்மானத்தை இராக் நிராகரித்து, அத்துமீறி நடப்பதென்றால் எங்களோட T–72 டாங்குகளைத்தான் அவங்க தேர்ந்தெடுக்கணும்!''

அமெரிக்கர் சொன்னார்: ''கவச வாகனங்கள் விற்பதில் எங்களுக்கு ஆர்வமில்லை. தொலை தூரத் தாக்குதலுக்கு உதவும் நல்ல பீரங்கிகளைத்தான் ஈராக்குக்கு விற்க நினைக்கிறோம். அப்பத்தான் அடுத்த யுத்தத்தில் வெகு சீக்கிரம் தோத்துப் போகாம அவங்க தாக்குப்பிடிக்கலாம்.''

''இதைப் பற்றி அமெரிக்காவின் ராணுவ அதிகாரிகளுக்குத் தெரியுமா?''

''தெரியாது; ஆனால் அமெரிக்காவின் வர்த்தகத் துறை அதிகாரிகளுக்குத் தெரியும்! ஈராக்குக்கு அதிர்ஷ்டமில்லாமல் இருக்கலாம்; ஆனால் மத்தவங்க பணம் பண்ண அவங்க அளிக்கும் ஒத்துழைப்புக்கு ஈடு இணையே கிடையாது!''

பிரெஞ்சு வர்த்தகர் பிற்ரிடம் சொன்னார்: ''புது ஆர்டர் பிடிப்பதை விட, பழைய ஆர்டரைப் புதுப்பிப்பதுதான் நல்லது. ஈராக்கிடம் இருந்த எங்களோட எக்ஸோசெட் ஏவுகணைகள் எல்லாம் இந்த வளைகுடா போரிலே தீர்ந்து போயிருக்கும். அதனால சுலபமா ஆர்டரைப் புதுப்பிச்சுக்கிட்டு வந்துடுவேன்!''

''அப்படி மனப்பால் குடிக்காதீங்க,'' என்று இடைமறித்தார் சீனாவிலிருந்து வந்திருந்தவர். ''எங்களோட ஸில்க்வோர்ம் ஏவுகணையின் சிறப்பைப் புரிஞ்சுக்கிட்டா



# இணையில்லா வியாபாரம்!

ஆர்ட் புக்வால்ட்

அப்புறம் சத்தாம். உங்களோட எக்ஸோசெட் பக்கம் தலை வைச்சுக் கூடப் படுக்க மாட்டார்! அதான் இந்தப் போரிலே எக்ஸோசெட்டின் லட்சணத்தைப் பார்த்துட்டாரே. அவர்!''

அப்போது ஒரு ஜெர்மானியர் குறுக்கிட்டுக் கூறினார்: ''நமக்குள் எதுக்குச் சண்டை போட்டுக்கணும்? நம்ம எல்லாருக்குமே தேவையான அளவு வியாபாரம் கிடைக்கும். அணு குண்டுகளைத் தயாரிக்கும் காண்டிராக்ட் ஜெர்மனிக்குக் கிடைத்தாலும், குண்டுகளைத் தாங்கிச் செல்லும் ஏவுகணைகளை வேறு நாடு சப்ளை செய்ய நாங்க பரந்த மனப்பான்மையுடன் ஒப்புக் கொள்வோம்!''

அப்போது ருஷ்யர் சொன்னார்: ''இதப் பாருங்க, லிதுவேனியா ருஷ்யாவிலிருந்து பிரிஞ்சு போறதா பயமுறுத்துது. அதை அடக்கி ஆள, கிளர்ச்சிகளை ஒடுக்கும் உபகரணங்களை நாங்க வாங்க வேண்டியிருக்கு. அதுக்கு எங்களுக்குப் பணம் வேணும். அதனால ஈராக்குக்குப் போர் விமானங்கள் சப்ளை பண்ணும் தனி உரிமையை மட்டும் எங்களுக்கே விட்டுக் கொடுத்துடுங்க.''

''உங்க மிக் விமானங்களை விட எங்களோட மிராஜ் போர் விமானங்கள்தான் உசத்தி'' என்றார் பிரெஞ்சுக்காரர்.

''அப்படின்னா உங்க மிராஜ் விமானங்கள் ஏன் இந்த யுத்தத்தில் நல்லா போரிடலே?''

''ஏன்னா, அவற்றைச் சத்தாம் ஈரானில் கொண்டு போய் நிறுத்திட்டார். அவற்றை யுத்தத்தில் பயன்படுத்தினால் அவற்றின் புது மெருகு குறைஞ்சுடுமேன்னு அவருக்குப் பயம்!''

பிரிட்டிஷ்காரர் கேட்டார்: ''யாராவது கண்ணி வெடி நீக்கிகளை சப்ளை செய்யப் போறீங்களா?''

மௌனம் நிலவவே பிரிட்டிஷ்காரருக்கு ஒரே சந்தோஷம். ''பேஷ்! பேஷ்! அப்படின்னா நாங்க விலையைக் குறைச்சுச் சொல்ல வேண்டாம்! தாராளமா கூட்டியே வைக்கலாம்!''

அப்போது விமான நிலைய மைக் அறிவித்தது: ''பாக்தாதுக்குச் செல்லும் லுஃப்தான்ஸா நிறுவன விமானம் புறப்படத் தயாராக இருக்கிறது. பெண்கள் குழந்தைகளுக்கும் முன்னதாக, உடல் ஊனமுற்றோரும் சர்வதேச ஆயுத வர்த்தகர்களும் முதலுரிமை பெற்று விமானத்தில் முதலில் ஏறலாம்!''

நன்றி: ஹிந்து



# மருத்துவமா? வியாபாரமா?

'ஜெயிலுக்குப் போக வேண்டிய டாக்டர்கள்?' என்ற தலைப்பில் கல்கி மருத்துவச் சிறப்பிதழில் நான் எழுதிய கட்டுரையைப் படித்த டாக்டர் நண்பர் ஒருவர், ''என்ன ஸார், டாக்டர்கள் மீது ரொம்பக் கோபமாக இருக்கிறீர்கள் போலிருக்கே?'' என்றார்.

''அப்படியல்ல; பல டாக்டர்களின் ஆற்றல்கள் எனக்குத் தெரியும்'' என்றேன். ஒரு உதாரணம்: என் உறவினர் ஒருவர் கடுமையான தலைவலி – ஜுரத்தில் பல நாட்கள் அவதிப்பட்டுக் கடைசியில் விஜயா மருத்துவமனை டாக்டர் செரியனிடம் (மூத்தவர்) ஒரு நண்பரின் யோசனைப்படி அழைத்துப் போகப்பட்டார். அப்போது யதேச்சையாக மாடி வராந்தாவில் நின்று கீழே பார்த்த டாக்டர் செரியன், என் உறவினர் காரை விட்டு இறங்குவதைக் கண்டார். மறுகணமே, ''இதோ ஒரு மெனின்ஜைட்டிஸ் கேஸ் வருகிறது: லம்பார் பங்சருக்கு ஏற்பாடு செய்'' என்று உதவியாளரிடம் கூறினார். சோதனையில் நோய் உறுதியாயிற்று. அதன் பிறகு செரியன் என் உறவினரைக் குணப்படுத்தியது, யமனுடன் போராடி உயிரை மீட்டு வந்த நிகழ்ச்சி. இது சில டாக்டர்களின் ஆற்றலுக்கு எடுத்துக்காட்டு. ஆனால் இதே உறவினர், செரியனைச் சந்திக்குமுன் சில வாரங்களாகவே ஒரு டாக்டரால் டைஃபாய்டுக்கு மருந்து கொடுக்கப்பட்டு வந்தார் என்பதும் உண்மை. அந்த டாக்டர் ஜனாதிபதி விருது பெற்றவர் என்பதும் சத்தியம்! எனவே, டாக்டர்களும் மனிதர்களே; அவர்கள் தவறு இழைக்க முடியும் என்பதும் மெய்யாகிறது.

இந்தத் தவறுகள் மூன்று வகைப்படும். ஒன்று, டாக்டரையும் மீறி நடந்துவிடும் தவறுகள். இரண்டு, டாக்டருடைய அசிரத்தையால் ஏற்படும் தவறுகள். மூன்று, தங்கள் ஆற்றலையும் எல்லையையும் உணராமல் தங்கள் சக்திக்கு மீறிய கேஸ்களை உரியவரிடம் ஒப்படைக்காமல் தாங்களே எடுத்துக்கொள்வதால் ஏற்படும் தவறுகள். முதல் வகையை மன்னித்துவிடலாம். அடுத்த இரண்டு அம்சங்களை அத்தனை எளிதாக ஒதுக்கிவிட முடியாது. மேல்நாடுகளில் டாக்டர்களுடைய கவனக் குறைவுக்குக் கடுமையான தண்டனைகள் உண்டு. இங்கு அப்படி இல்லாததே, டாக்டர்கள் அலட்சியமாக நடந்து கொள்ள ஒரு காரணமாகிறது.

சமீபத்தில், சென்னை, பூந்தமல்லி நெடுஞ்சாலையில், ஒரு பிரபல மருத்துவமனையில் நடந்த சிறுநீரக மாற்று அறுவைச் சிகிச்சையில், தானம் செய்தவர், பெற்றுக்கொண்டவர் ஆகிய இருவருமே மரணமடைந்ததும், அதைத் தொடர்ந்து இரு டாக்டர்கள் கைதாகி ஜாமீனில் விடுவிக்கப்பட்டதும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தியுள்ளது.

மருத்துவத் துறை இந்தப் போலீஸ் நடவடிக்கையைக் கடுமையாக எதிர்த்துள்ளது. ''கவனக் குறைவு காரணமாக நடந்த மரணங்களா என்பதை மருத்துவத் துறைதான் தீர்மானிக்க முடியும்; போலீஸ் அல்ல'' என்பது சில பிரபல டாக்டர்களின் வாதம். இதை முழுவதுமாக ஏற்பதற்கில்லை. டாக்டர்கள் பொதுவாக ஒருவரை ஒருவர் விட்டுக் கொடுக்க மாட்டார்கள் என்பதோடு, ஒரு டாக்டர், இன்னொரு டாக்டர் பற்றிப் பகிரங்கமாகக் குறை கூறிப் பேசக் கூச்சப்படுவார். (அந்தரங்க உரையாடலில் வெளுத்துக் கட்டுவார் என்பது வேறு விஷயம்!) எனவே, நீதிபதிகள்தாம் வழக்கை விசாரிக்க வேண்டும். அந்த விசாரணையில் சாட்சிகளாக அவர்கள் பல டாக்டர்களின் கருத்துக்களைக் கேட்டறியலாம். குறுக்கு விசாரணைக்கு இடமிருக்கும் போது உண்மை வெளிவராமல் போகாது. நோயாளி அல்லது அவர் குடும்பத்தினருக்குப் பாதுகாப்புக் கிடைக்கும். டாக்டர்களுக்கும் நீதி கிடைக்கும். நீதித் துறை விசாரணைக்கு டாக்டர்கள் அஞ்சினால், அதுவே அவர்களுக்கு எதிரான ஒரு வாதமாகிவிடும்!

சமீபத்தில் கிண்டி தனியார் மருத்துவமனை ஒன்றில், ஒரு பெண்மணிக்குத் தேவையற்ற தீவிர சிகிச்சைகள் அளிக்கப்பட்டது குறித்து, அவரது குடும்ப டாக்டர் வருத்தப்பட்டு எழுதியதுடன், தாம் வெட்கித் தலைகுனிவதாகவும் குறிப்பிட்டார்! அதற்கு அந்த மருத்துவமனையின் டாக்டர் பதிலடி கொடுத்திருக்கிறார். இந்த விவாதத்தில் டாக்டரல்லாத நாம் ஒரு கருத்துக் கூற முடியாது என்றாலும், மருத்துவத் துறை, மற்றொரு வியாபாரத் துறையாக மாறி வருவதை உணர்ந்துதான் இருக்கிறோம். மக்களிடம் ஏற்பட்டுள்ள இந்த எண்ணம் மாறுவதுபோல் டாக்டர்கள் சமூகம் நடந்து கொள்வதாகத் தோன்றவில்லை.



இளைஞர்களின் இதயத்தில்
இடம் பிடிக்கும்
இனிய இலக்கிய இதழ்!

# சுபமங்களா

(ஸ்ரீராம் குரூப் நிறுவனம் ஊக்குவிக்கும் ரஞ்சனி டிரஸ்ட் வெளியீடு)

பதிப்பாளர்: வத்சலா ரங்கநாதன்

ஆசிரியர்: கோமல் சுவாமிநாதன்

விலை: ரூபாய் 4/-

லா.ச.ரா.வுடன் நேர்காணல்

மேலாண்மை பொன்னுசாமி
— நெடுங்கதை

அசோகமித்திரன், வல்லிக்கண்ணன்,
ஜெயமோகன் — சிறுகதைகள்

கனிமொழியின் கவிதை

அரசியல் சினிமா
— ஒரு செமினார்

வெள்ளித்திரையில்
விதவைத் திருமணம்

எண்பதுகளில் நாவல்கள்
— தி.க.சி

எப்ரல் இதழ்
வந்துவிட்டது!

10, அப்பாதுரை தெரு, சீத்தம்மாள் காலனி, சென்னை-18. போன்: 452996



இந்த முகமூடி
இனிமே
வேணாம்!


இந்த முகமூடியும்
வேணாமே...

சந்திர சாமி

சி.பி.ஐ.

சி.பி.ஐ.
பிரதமரோட
நண்பரா
இருந்தா என்ன?
தொலைச்சுப்புடறேன்
தொலைச்சி...

சந்திரசேகர்
முதல்ல
உன்னை
ஒழிச்சுக்
கட்டிடறேன்
பாரு...

காங்கிரஸ்
இணைப்பு
முயற்சி


ஐயோ,
இன்னொரு
கேர்ள்
ஃப்ரெண்டா!



# கல்கி

1991 ஏப்ரல் 7
மலர் : 49 இதழ் : 36
பிரமோதூத பங்குனி 24



## குறுக்கு வழியில் பதவியைப் பிடி!

தேர்தலையொட்டி எல்லாக் கட்சிகளும் கூட்டணிகளும் சுறுசுறுப்படைந்து வருகின்றன. தேர்தல் கமிஷனின் எச்சரிக்கைகளை எப்போது மீறினால் தப்பித்துக் கொள்ளலாம் என்று யோசித்துப் பல மாநில அரசுகள் இப்போதே செயலாற்றுகின்றன. பணபலம், பொய்யான வாக்குறுதிகள், திடீர் சலுகைகள், அவசரமாக நிறைவேற்றப்படும் நல்வாழ்வுத் திட்டங்கள் என்று பல ஊழல்கள் நடக்கும். வாக்குச் சாவடிகளைக் கைப்பற்றுதல் போன்ற குண்டர்களின் கைங்கர்யங்களுக்கும் குறைவிராது.

இவற்றையெல்லாம் ஒதுக்கி விட்டுக் கொள்கைகளின் அடிப்படையில் அணுகினாலும் நமக்குக் கவலையே ஏற்படுகிறது. உதாரணமாக பி. ஜே. பி. யின் பொருளாதாரக் கொள்கைகள் நல்லவை. அவற்றால் நாடு பயன்பெறும். ஆனால் அதை விட்டு விட்டு, வோட்டுப் பெறும் ஒரே உத்தியாக பி. ஜே. பி., 'ராம் — ரொட்டி' என்ற கோஷத்தை எழுப்புகிறது. 'மக்கள் வயிற்றுக்கு ரொட்டி; அயோத்தியில் ராமர் கோயில் — இவைதாம் லட்சியம்!' என்கிறது. மசூதியை இடித்து விட்டு அந்த இடத்தில்தான் ராமர் கோயில் எழுப்பப்படும் என்று பி. ஜே. பி. கூறவில்லைதான். ஆனால் பி. ஜே. பி.க்கு ஆதரவு தரும் விசுவ ஹிந்து பரிஷத், பாஜ்ரங்தால் போன்ற அமைப்புக்கள் அதி தீவிர, மதச் சார்புடன் பேசுகின்றன; நடந்து கொள்கின்றன. பிற மதத் துவேஷத்தையும் இவை ஒளிக்காமல் வெளியிடுகின்றன. நாளை ஒரு வேளை, பி. ஜே. பி. பதவிக்கு வந்தால், இந்த அமைப்புக்களின் ஆதரவுடன்தான் ஆட்சியைப் பிடித்தது என்பதால், இவற்றின் மேலாதிக்கத்துக்கு பி. ஜே. பி. உட்பட நேருமே என்பதை நம்மால் எண்ணிப் பாராமல் இருக்க முடியவில்லை.

'மதச் சார்பின்மை' என்பது மதங்களைப் புறக்கணிப்பதாக இருக்கக் கூடாது எனில், பி. ஜே. பி. யின் ஹிந்து ராஷ்டிரமாகவும் அது மாறி விடக் கூடாதுதான். இது ஆபத்தான போக்கு. 'எம்மதமும் சம்மதம்; எல்லோரும் ஓர் நிறை' என்ற கருத்தே ஏற்கத்தக்கது.

தேசிய முன்னணி ஆட்சியில் மக்களுக்கு ஏற்பட்ட ஏமாற்றம் காரணமாக அதனை வாக்காளர் இத் தேர்தலில் புறக்கணித்து விடுவார்கள் என்றும்; எனவே, தேர்தல் இ. காங்கிரஸுக்கும், பி. ஜே. பி.க்கும் இடையே நேரடி மோதலாகத்தான் அமையும் என்றும் பி. ஜே. பி. கருதுகிறது. இப்படி தேர்ந்து, காங்கிரஸை முறியடித்துப் பதவிக்கும் வந்து விட்டால், பிறகு நிதானம் காட்டிக் கொள்ளலாம் என்பது நல்லெண்ணம் படைத்த சில பி. ஜே. பி. தலைவர்களின் கருத்தாக இருக்கலாம். ஆனால் இது புத்திசாலித்தனமான உத்தி அல்ல. அந்த கட்டத்தை அடைவதற்கு முன்பே நிலைமை எல்லை மீறிப் போய் விடும் அபாயம் உண்டு.

'நிலையான ஆட்சிக்குக் காங்கிரஸுக்கு வோட்டு' என்று கூறியே மக்களைத் தம் பக்கம் இழுத்து விடலாம் என்று கருதுகிறார் ராஜீவ். இதைத் தவிர அவரிடம் வேறு துருப்புச் சீட்டே கிடையாது. தேசிய முன்னணி அடைந்த படுதோல்விக்குப் பிறகு, மக்கள் நிலையான ஆட்சி வேண்டும் என்பதற்காகவே தம் பக்கம் சரிவார்கள் என்று அவர் எதிர் பார்த்தால் ஏமாற்றமே அடைவார். காங்கிரஸ் ஆட்சியின் ஊழல்களும் லஞ்ச லாவண்யங்களும் மக்கள் மனத்தில் பசுமையாக உள்ளன. ராஜீவ் தம்மை ஓர் இந்திரா காந்தியாகக் கருதிக் கொள்ளவும் முடியாது. மக்களைக் கவர வேண்டுமானால் அவர், 'நடந்ததை மன்னித்து மறந்து விடுங்கள்; நடக்கப் போவதை நினையுங்கள்' என்று கூறி, நல்ல திட்டங்களை முன்வைக்க வேண்டும்.

தேசிய முன்னணியின் நிலை பரிதாபம். ஜனதா தளம் பிளவுண்ட பிறகு இப்போது ஏ. ஜி. பி. யும் பிளவுபட்டிருக்கிறது. மண்டல் அறிக்கை ஒன்றுதான் தங்களுக்குக் கைகொடுக்கும் என்பதாக தே. மு. தலைவர்கள் எண்ணுவதாகத் தோன்றுகிறது. இது குறுகிய கண்ணோட்டம் என்பதுடன், யதார்த்த நிலையை உணராத போக்கும் ஆகும்.

ஆக, எல்லோருமே ஏதோ ஒரு குறுக்கு வழியில் பதவிக்கு வரத்தான் முயற்சி செய்கிறார்களேயொழிய, நாட்டு நலனுக்குகந்த, உருப்படியான கொள்கைகள் அல்லது திட்டங்களின் அடிப்படையில் அல்ல என்பதே இந்த நாட்டை இன்று பிடித்துள்ள துரதிர்ஷ்டம்.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

வட்டமேஜை




# பக்குவமான அலசல்!

○ யார் சார், இந்த விஷ்ராம்? டெலிவிஷன் பெட்டி உடைப்புப் போராட்டத்தை, அட்டகாசமாகக் கிண்டல் செய்து எழுதியிருக்கிறாரே...? வரிக்கு வரி நூள் கிளப்பி விட்டாரே? அதுவும், 'அம்மி உடைத்துப் பல நாட்களாகியும் திடீர் திடீரென்று ராத்திரி நேரத்தில் எழுந்து உட்கார்ந்து அம்மி அரைப்பது போல் அபிநயம் பண்ணுவதுதான் கவலையாக இருக்கிறது...' என்ற அந்தக் கடைசி வரிகள், வாய்விட்டுச் சிரிக்க வைத்து விட்டன...

திருமுகை, ஜி. கதிரேசன்.

○ 'பெண் என்பதற்காக' என்ற கதை சாமான்ய நடைமுறை எதிர்பார்ப்புகளை மாறுபட்ட கோணத்தில் கவனித்து ஆராய வைத்தது. இரக்கம் இறக்கம் தந்துவிடக் கூடாது என்ற கருத்து பலே!

தஞ்சாவூர், ஜி. கே. ராம்.

○ 'தாக்கம்' சின்ன யுக்தியை லிம்பிளாகச் சொன்ன சின்னக் கதை. படித்த வாசகர்களில் எத்தனை இளம் ஜோடிகள் உசுப்பப் பெற்று... மூன்று முறை...??? ம்..ம்..ம்.

மானம்புச்சாவடி, ஏ. ஆர். லலிதா.

○ வட்டமேஜை பகுதியில் 'கல்கி வாசகர்களே உஷார்!' என்று உள்ளது. எங்கே சார்! கடைசி எழுத்தின் மீது புள்ளி எங்கே காணவில்லையே!

வேலூர் — 4, கே. வேங்கடேசன்.

○ 'ஹம்' திரைப்படம் வழக்கமான மசாலா கதை தான் என்று நேரடியாகக் கூறாமல், நாசூக்காக விமர்சனம் செய்திருப்பதைப் பாராட்டாமல் இருக்க முடியாது.

திருச்சி — 1, என். சம்பத்.

○ குழப்பமான சூழ்நிலையில் குடியரசுத் தலைவர் செயல்பட்ட முறையைக் குற்றம் சாட்டிய கலைஞருக்கு 'விளக்கப் பாடம்' கொடுப்பது போல இருந்தது உமது தலையங்கம்.

திருச்சி — 2, ஆர்க். எழிலன்.

○ தலையங்கத்தில், கருணாநிதியின் முறையற்ற கோபத்தையும், ஆர். வி. யின் அறிவார்ந்த அமைதியையும், அழகாக விளக்கியுள்ளதுடன், விவேகத்துடன் செயல்பட்டுள்ள ராஜீவையும், பாராட்டியுள்ளது. அருமை! நடுநிலை பிறழாத 'கல்கி'க்கு, மனமார்ந்த பாராட்டுக்கள்!

கும்பகோணம், கே. என். பாலகிருஷ்ணன்.

○ 'ஜெ. முதல்வரானால்...' 'பா. ஜ. கட்சியின் ஜோஷி பேட்டி, 'சேலம் J. D. மாநாட்டுச் சங்கதிகள், 'தலையங்கம்,' 'சொக்கட்டான்' கவிதை, தேர்தலைச் சந்திக்க உள்ள மக்களுக்கு நாட்டின் அரசியல் நிலையை அறிந்து கொள்ள நிறையத்தான் தகவல்களைத் தரமாகக் கொடுத்து விட்டீர்கள். அதிலும், ஜெ. தலைமையின் வழி முறைகளை அலசி ஆய்வு செய்து பக்குவமாகக் கலைபடுத்தியுள்ள விதம்... வாழ்!

தஞ்சாவூர், ஆர். விஜயராகவன்.

○ பி. ஜே. பி. தலைவர் ஜோஷி பேட்டியில், இந்தோனேஷியா போன்ற முஸ்லிம் நாட்டில் ராமருக்குப் பிரமிக்கத்தக்க மரியாதை தருவதாகக் கூறியுள்ளார். அதே போல் இந்துக்கள் பெரும்பான்மையாக உள்ள இந்தியாவில், முஸ்லிம்களின் உணர்வு புண் படாமல் இந்துக்கள் ராமஜென்மபூமி — பப்ரி மஸ்ஜித் பிரச்னையில் விட்டுக் கொடுத்து நடந்து கொள்வதுதானே நியாயம்!

திருச்சி — 1, மைக்கேல் எம். ஜேம்ஸ்.

○ நமது நாட்டில் எந்தக் கட்சியிலும் தனி நபர் வழிபாடுதான் உள்ளது என்பது ஏற்றுக் கொள்ள முடியாதது. பாரதிய ஜனதா கட்சி, கட்சித் தேர்தலை நடத்தி, வேறு தலைவரைத் தேர்ந்தெடுத்துள்ளது. அங்கு மற்ற கட்சிகள் போல் தனிப்பட்ட நபருக்காக வோட்டு விழுவதில்லை. மற்ற கட்சிகளில் தலை காலி என்றால் கட்சியே காலியாகிவிடும்! பா. ஜ. கட்சியில் அப்படியில்லை.

காரைக்கால், ப. குமரன்.

○ ஜெயலலிதாவின் அரசியல் பற்றி இத்தனை தெளிவாக அலசிய கட்டுரை சமீபத்தில் எந்த பத்திரிகையிலுமே வரவில்லை. சபாஷ்!

ஈச்சங்குடி, திலகவதி.

○ அச்சுறுத்தல்களை அம்பலப்படுத்திச் சுதந்திரமாய் அரசியல் நடத்துவது ஜனநாயக நாட்டில் சாத்தியமில்லை என்று சொல்ல முடியாது! அதுவும் ஒரு பலம் பொருந்திய கட்சியை வழிநடத்தும் ஜெ... தி. மு. க. வினால் முடக்கப்பட்டார் என்ற வாதம் சற்று மிகையானதே. மக்களை நெருங்கி வந்து... தேர்தல் நேரத்திலாவது தன் ஜனநாயகக் கடமைகளை அவர் செய்வாரா...?

அகூர், ஆர். ஜெயச்சந்திரன்.

○ 'ஜெயலலிதா முதல்வரானால்...' தென்னத் தெளிந்த கட்டுரை. பாராட்டுகள். கட்டுரையின் முடிவில் கூறப்பட்டுள்ளபடி தாம் முதல்வராகாவிடில் யாரை நியமிக்க உத்தேசிக்கிறார் என்று முன் கூட்டியே தெரிவித்தால் மேலும் சிறப்புப் பெறுவார்.

தஞ்சாவூர், கே. காமாக்ஷி.

○ சுமார் 680 லட்ச ரூபாயை ஆழ்கடலில் பெருங்காயம் கரைப்பது போல் கரைத்திருக்கிறார்கள் நமது மீன்வளத்துறையினர் என்று படித்த போது, "வரி" கட்டும் மக்களுக்கு இதயத்தில் ரத்தம் வடிகிறதைக் கூடவே பார்க்க முடிகிறது!

பொள்ளாச்சி — 2, ஏ. வி. பிரபு.

# ஆழ்கடலில் பள்ளத்தாக்கு! விளிம்பிலே நீர்மூழ்கி!

அட்லாண்டிக் கடலுக்கடியில், வெடிப்புக்குள்ளான அதன் தரைப் பரப்பில் ஒரு பள்ளம். அதன் விளிம்பில் தரை தட்டி, எந்த நேரமும் அந்த பயங்கரப் பள்ளத்துக்குள் விழுந்து விடக்கூடிய ஊசலாடும் நிலையில் அந்த அணுசக்தி நீர் மூழ்கிக் கப்பல்! அதனைத் தேடிக் கண்டு பிடித்து மீட்டு, மேலே கொண்டு வர வேண்டியது உடனடியான அவசரப் பணி.

இது சாத்தியமா, அல்லவா என்கிற கேள்விகளுக்கெல்லாம் இடமே இல்லை.

* அபிஸ் படக் காட்சிகள்



சாத்தியமாகியே தீர வேண்டிய நெருக்கடி. இதுவரை இப்படியொரு விபத்தோ, அதற்கான மீட்புப் பணிக்கான அவசியமோ ஏற்பட்டதேயில்லை. எனவே, அதற்கான தனிப் பயிற்சி பெற்றவர்களோ, முன் அனுபவம் உள்ளவர்களோ இல்லை.

இப்படிப் பட்ட சூழ்நிலையில் அந்த நீர் மூழ்கியை மீட்பது எப்படி?

அமெரிக்கக் கடற்படை அதிகாரிகளின் முன்னே விசுவரூபம் எடுத்து நின்ற கேள்வி இது.

கடலுக்கடியில் பணியாற்றும் அனுபவம் உள்ள தொழில் நுட்ப வல்லுனர்கள் சிலர்

**ஆச்சரியமான ஆங்கிலப் படம்**



• திரைக்கதை எழுதி, இயக்கியுள்ள ஜேம்ஸ் காமெரன்.

இருக்கத்தான் செய்தார்கள. ஆழ்கடல் பரப்பில் எண்ணெய் தேடி, அதனை மேலே எடுத்துவரும் குழாய்களையும் இதர சாதனங் களையும் அமைத்துச் சாதனை புரியும் திற னாளர்கள் அவர்கள். அவர்களைப் பயன் படுத்தினால் என்ன?

எண்ணம் தோன்றின கணமே செயல் பட்டனர் கடற்படை அதிகாரிகள். அந்தத் தொழில் நுட்ப வல்லுனர்கள் வெளிப் படுத்திய தயக்கத்தையோ, எடுத்துரைத்த ஆட்சேபணை வார்த்தைகளையோ பொருட் படுத்தவே இல்லை.

பெந்திக் பெட்ரோலியம் நிறுவனத்தைச் சேர்ந்த ஒன்பது பேர் கொண்டது அந்தக் குழு. தலைவன் பிரிக் மன். திட்ட என்ஜினியர் அவன் மனைவி லிண்ட்ஸே: இருவருமே கூடிய விரைவில் விவாகரத்துப் பெற்றுவிடும் மன நிலையில். லிண்ட்ஸே யின் அதிகாரப் போக்கைச் சகித்துக் கொள்ள முடியாத் குழு உறுப்பினர்கள் சிலர்.

அந்தத் தொழில் நுட்பக் குழுவின் தலைமைப் பொறுப் பை ஏற்க எல்லா வகையிலுமே தகுதி வாய்ந்தவன் பிரிக்மன். என்றாலும், மேலதிகாரிகளின் உத்தரவுகளுக்குச் சமயங்களில் கட்டுப்பட மறுக்கும் குணமும் கொண்டவன். எதையுமே சர்வ சாதாரணமாகக் கருதும் துணிச்சலான மனப் போக்கு நிறைந்தவன்.

கடலடியில், சுமார் இரண் டாயிரம் அடி ஆழத்தில் ஊச லாடிக் கொண்டிருந்தது அந்த அணு சக்தி நீர் மூழ்கி. அது நிலை புரண்டால் பெரும் பள்ளத்தினுள் தான் விழ வேண்டும். அந்தப் பள்ளத்தின் ஆழம் நேர் கீழே சுமார் இரண்டரை மைல்களுக்கும் அதிகம் என்று கணக்கிட்டார்கள்.

இப்படிப்பட்ட பின்னணியில், இத் தகைய ஒரு மீட்புப் பணியில் கொஞ்சமும் முன் அனுபவமே இல்லாத தன் குழு வினரை ஈடுபடுத்துவதற்கு பிரிக்மன் மறுத்த தில் வியப்பில்லை.

என்றாலும், கடற்படையினருக்கிருந்த ஒரே நம்பிக்கை அவர்கள்தாம். அந்த நீர் மூழ்கியின் தலைவிதியை நிர்ணயிக்கக்கூடிய வர்கள் அவர்கள் மட்டும் தாம். எனவே, அவர்களைப் பயன் படுத்துவதைத் தவிரக் கடற்படையினருக்கு வேறு வழியே இல் லாமல் போயிற்று.

மாறுபட்ட நோக்கங்களும் முரண்பட்ட கருத்துக்களும் கொண்டிருந்த அந்தக் குழு வினர் கடற்படை அதிகாரிகளால் வற்புறுத் தப்பட்டுக் கடலுக்கடியில் போன போது அந்தப் பள்ளத்தின் இனம் காணமுடியாத மர்மம் அவர்களை எதிர் நோக்கியது. அங்கே அவர்கள் சந்திக்க நேர்ந்த பிரச்னை, ஒரு மனிதன் செய்யக் கூடிய மிகப் பெரிய தியாகத்தைக் கோரியது.

கடலடியில் இடம் பெற்றுவிட்ட இந்த இயற்கைப் படைப்பான ஆழ்பள்ளத்தின்



• தண்ணீருக்கடியில் படப்பிடிப்பு.

துணையுடன் மனித மனங்களில் இடம் பெற்றுள்ள ஆழ்பள்ளங்களை அணுகி ஆய்வு செய்ய முற்படுகிறது கதை. மாறு பட்ட நோக்கங்கள் கொண்ட மனிதர்களை ஒன்று படுத்தும் அந்த ஏதோவொரு இணைப்பைக் கண்டுணர வேண்டிய நிலைக்கு அவர்களைக் கொண்டு செல்வ தோடு, ஒரு குறிப்பிட்ட சந்தர்ப்பத்தில், இந்தப் பணியில் ஈடுபட்டுள்ள ஒவ்வொரு வருமே தங்கள் மனங்களில் இடம் பெற் றுள்ள ஆழ்பள்ளத்தை ஆராய வேண்டிய, கட்டாயத்துக்கு உட்படுத்தவும் செய்கிறது.

வாழ்க்கை நடை முறைகளில் சரியான முடிவுகள் எடுப்பதும் தவறான முடிவுகளை எடுப்பதும் கூட மனித மனத்தின் உள்ளே இடம் பெற்றுள்ள இந்த ஆழ்பள்ளத்தின் ஓர் அம்சம்தான். எனவே, மனித இனம் மீட்சி பெற வேண்டுமானால் மனித மனம் மாற்றம் பெற வேண்டும்.

இந்தக் கருத்தைக் கதையுடன் தொடர்பு படுத்துவதற்காக, ஆழ்கடலில் இருளுக்குள் செல்லும் கதை மாந்தர்கள் ஒரு வெளிச்சமான அதிசயமிக்க உலகினுள் அடியெடுத்து வைத்து வியப்பின் எல்லைக் குச் சென்று மீண்டும் வெளியேறுகிறார்கள். அந்த உலகை உயர் ஆற்றலாக — முடிவான ஆற்றலாக வர்ணிக்கிறது கதை.

கடலடியின் ஆழ்பள்ளத்தில் மனிதனை எதிர் நோக்கும் அந்த உயர் ஆற்றல் — அவனுடைய வாழ்க்கை நடவடிக்கைகளை நீதித் தராசில் எடையிடும் சக்தி வாய்ந்தது. அன்புடனும் தியாகத்துடனும் இணைத் தொடர்பு பெற்றதாக இந்த அம்சத்தை விவரிக்கிறது கதை.

இக்கதையை THE ABYSS என்கிற தலைப்பில் படமாக்கச் செய்யப்பட்டுள்ள ஏற்பாடுகள் ஒரு தொழில் நுட்பச் சாதனை யைப் படைத்துள்ளன.

கடலுக்கடியில் நிகழும் சம்பவங்களைப் படம் பிடிப்பதற்கு வசதியாக இரண்டு தண்ணீர்த் தொட்டிகள் உருவாக்கப்பட்டன. பெரிய தொட்டியின் சுற்றளவு 600 அடி. ஆழம் 55 அடி. சுமார் 7,500,000 காலன் தண்ணீர் கொள்ளக் கூடியது. (சுமார் 5 லிட்டர் ஒரு காலன்.) சிறிய தொட்டி 200க்கு 115 அடி அளவு கொண்டது. ஆழம் 25 அடி. சுமார் 2,600,000 காலன் தண்ணீர் கொள்ளக் கூடியது. நீருக்கடியில் நடை பெறும் சம்பவங்களைப் படம் பிடிக்க இதுவரை கட்டப்பட்டுள்ள தொட்டிகளி லேயே மிகப் பெரியவை இவைதாம்.

சுமார் பன்னிரண்டு வாரங்கள் இந்தத் தொட்டிகளினுள் படப் பிடிப்பு நடை பெற்றது. அதற்கு முன்னர், நடிப்பவர் களுக்கு நீரில் மூழ்கி இயங்குவதற்கான விரி வான பயிற்சிகள் அளிக்கப்பட்டன. எந்த வொரு குறிப்பிட்ட தருணத்திலும் மூன்று மணி நேரத்துக்குக் குறையாமல் அவர்கள் நீருக்குள் இயங்க வேண்டியிருக்கும் என்ப தால் அதற்கான தகுதிச் சான்று பெற வேண்டியிருந்தது. இப்படி நாள் ஒன்றுக்குப் பன்னிரண்டு மணி நேரப் படப்பிடிப்பு!



"'ஐந்திலே வளையாதது ஐம்பதிலே வளையும்'னு எப்படிச் சொல்றே?"

"ஐந்து ரூபாய் லஞ்சம் கொடுத்தா மாட்டேன்னு அடம் பிடிக்கிற அதிகாரி ஐம்பது ரூபாய் கொடுத்தா வளைஞ்சு கொடுத்து, காரியத்தைக் கச்சிதமா முடிச்சுக் கொடுத்திடுவாரே!"

— மல்லிகை மன்னன்.

வழக்கமாக நீரினுள் மூழ்குவோர் பயன்படுத்துவது போன்றதல்ல இவர்கள் அணிந்த ஹெல்மட். நடிப்பவரின் முகம் தெளிவாகத் தெரிய வேண்டும். நேர்முகம் மட்டுமின்றி, பக்கத் தோற்றமும் அப்படித் தெரிவது அவசியம். தவிர, குரல் ஒலி அதன் இயல்புத்தன்மை மாறாமல் வெளி யேற வேண்டும். கூடவே, மூச்சு விடுவதில் சிரமமே இருக்கக் கூடாது. இத்தனை வசதி களும் கொண்ட புதிய ஹெல்மட்டுகளைத் தயாரித்ததோடு இன்னொரு புதிய தொழில் நுட்பமும் பயன் படுத்தப்பட்டது. நடிகர் களின் மூச்சுக் காற்றுக்கான சிலிண்டர் காலியாகி விட்டால் அதற்காக அவர்கள் மேலே வர வேண்டியது இல்லை. நீருக்கடியி லேயே அமைக்கப்பட்டிருந்த 'காற்று நிலைய'ங்களிலேயே நிரப்பிக் கொண்டு விடலாம். சிலிண்டரின் முழு அளவான தொண்ணூறு கன அடிக் காற்றையும் இரண்டே நிமிடங்களில் நிரப்பிக் கொண்டு விடலாம்.

55 அடித் தண்ணீரில் 33 அடி ஆழத்தில் படப்பிடிப்பு நடை பெற்றது. வசனங்கள் யாவும், நீரில் மூழ்கிய நிலையிலேயே நடிப் பவர்கள் பேச, நேரடியாகப் பதிவு செய்யப் பட்டன. இதற்கான விசேஷ ஒலித் தொடர் புகள் அமைக்கப்பட்டிருந்தன. இப்படிச் செய்யப் பட்டது இதுவே முதல் முறை.

நிகழ்ச்சிகள் இடம் பெறும் நிலைக்களன் கள் வேண்டுமே! தொட்டிகளினுள் நீருக்கடி யில் இதற்கென ஆறு செட்டுகள் நிறுவப் பட்டன. ஒவ்வொன்றும் 16 அடி விட்ட அளவில், 25 அடி உயரம் கொண்டவை. அரை அங்குல கனம் கொண்ட எஃகினால் ஆனவை. 20,000 பவுண்ட் எடை கொண் டவை.

படத்தைப் பார்க்கும் போது, 'நடிப்பு டைரக்ஷன் கதையம்சம் எல்லாம் ஒரு புற மிருக்கட்டும்; அதையெல்லாம் தூக்கிச் சாப் பிட்டு விடுகிறதே தொழில் நுட்ப சாதனை!' என்ற பிரமிப்பு ஏற்படாமல் இருக்க முடியாது!

— ஙிச்சாமி.



# முகம்

அவன் ஆபீஸ் போயிருந்தபோதே மனோ வீட்டிற்கு வந்து கல்யாண ஆல்பத்தைக் கொடுத்து விட்டுப் போயிருந்தான். அவன் வீட்டிற்குள் நுழையும் போதே,

'சித்தப்பா உன் போட்டோ' என்று அம்முக் குட்டிதான் கையில் ஆல்பத்துடன் ஓடிவந்தாள். பேண்ட்டை கழற்றிப் போட்டு விட்டு, வெறும் லுங்கியுடன் திண்ணையில் உட்கார்ந்து ஒவ்வொரு பக்கமாகப் புரட்டினான் — புகைப்படங்கள் வேறு ஒரு குதூகலமான உலகத்துக்கு அவனைக் கொண்டு போயின. அந்த ஆல்பம் முழுவதும் சந்தோஷமும் பெருமையும் நிரம்பி வழிந்தது.

சில படங்களின் நேர்த்தியில் அவன் தன்னைக் கரைத்துக் கொண்ட போதும், அருகில் அவளும் உட்கார்ந்திருக்க மனசு விரும்பி ஆல்பத்தை மடிமீது வைத்துக் கொண்டே அவளைத் தேடினான். அவள் அடுப்படியில் வேலையாயிருந்தாள். அவளைக் கூப்பிட தைர்யம் வரவில்லை.

ஒரு வேளை இந்த ஆல்பம் ஒரு வாரத்திற்கு முன்பே வந்திருந்தால்....

'என்ன பெரிய வேலை..... அம்மாவை செய்யச் சொல்லிவிட்டு இங்க வா...!' என்று சத்தம் போட்டு அழைத்திருப்பான். கடந்து போன ஒரு வாரம் அவனை, அவளை, வீட்டை எல்லோரையும் மௌனமாக்கி விட்டது.

இந்தக் கல்யாணப் பேச்சை ஆரம்பித்து வைத்ததே அம்மாதான். அவன் ஒவ்வொரு முறையும் அதைத் தள்ளிப் போட்டுக் கொண்டே போன போது, அம்மா அவனைச் சம்மதிக்க வைக்க செய்த முயற்சிகளையெல்லாம் நினைவு படுத்திப் பார்த்தான்.

நீண்ட நாள் யோசனைக்குப் பிறகு அவன் சம்மதித்த போது இந்த உலகமே தன் கைக்கு வந்து விட்டதைப் போல மகிழ்ந்த அம்மா...... கல்யாணத்துக்கு ஒரு மாதத்திற்கு முன்பே பேச்சு ஆரம்பித்து விட்டது. தெருவில் பாயை விரித்துப் போட்டு இரவில் வெகு நேரம் வரை அம்மா தெருப் பெண்களோடு பேசிக் கொண்டிருந்தாள். 'ஒரு மாதத்துக்கு முன்பிருந்தே பேசுவதற்கு என்ன இருக்கிறது இந்தக் கல்யாணத்தில்?' என்று தன்னையே கேட்டுக் கொண்டான்.

ஆனால் அம்மாவுக்குச் சொல்லவும், அவர்களுக்குக் கேட்கவும் நிறைய இருந்தது.

கல்யாணத்திற்குப் பதினைந்து நாட்களுக்கு முன்பே வீடு சுறுசுறுப்பாய் இயங்கியது. வழக்கமான தன் வீட்டு மௌனம் கலைந்து, பேச்சும், சிரிப்புமாய் மாறி விட்டது. இதைத்தான் அம்மா கல்யாணக் களை என்று சந்தோஷப்பட்டுக் கொள்கிறாள்.

அப்பா தன் பழைய நண்பர் ஒருவரைப் பார்த்துப் பேசி, பந்தலுக்கும், மைக்செட்டிற்கும் ரொம்ப சீப்பாகப் பேசி முடித்து விட்டு வந்து, அன்று இரவு அவனிடமும், அம்மாவிடமும் அந்த நண்பருக்கும் தனக்குமான நட்பு வந்த கதை, அவரின் நல்ல குணம், அவர் மனைவி, பிள்ளைகள், என்று ரொம்ப நேரம் பேசிக் கொண்டிருந்தார்.

அவனுக்கென்று இந்தக் கல்யாணத்தில் ஒதுக்கப்பட்ட வேலை 20,000 ரூபாயைக் கடன் வாங்குவது மட்டும்தான்.

மற்ற எல்லா வேலைகளையும் அப்பா, அம்மா, சேது அண்ணன், திண்டிவனத்தில் இருந்து இதற்காகவே தன் மகளோடு பத்து நாட்களுக்கு முன்னாலேயே வந்துவிட்ட சுசீலா சித்தி, எல்லோருமாய்ப் பகிர்ந்து கொண்டார்கள். இதுவரை இவன் பார்த்தேயிராத சிலர் எல்லாம் வீட்டிற்கு வந்து உட்கார்ந்து விட்டார்கள்.

ஒவ்வொருவர் வருகைக்கும் அம்மாதான் ஓடி வந்து,

"இவரு நம்ப சுசீலா சித்தியோட மூத்த மருமகன்டா.... விழுப்புரம் பெரியார் டெப்போவுல வேலை."

"இவ எங்க அண்ணன் மருமகளோட மூத்தவ" என்றெல்லாம் சொல்லிக் கொண்டிருந்தாள். அம்மாவை இப்படிப்பட்ட அபூர்வமான சந்தோஷங்களில் எப்போதாவது தான் பார்க்க முடியும். சேது அண்ணன் கல்யாணத்தில், அப்புறம் அம்முக் குட்டி பிறந்த போது, அதற்கப்புறமாக அவன் இப்போதுதான் பார்க்கிறான்.

வீட்டுக்கு வந்த ஒவ்வொருத்தரிடமும் தனக்கு என்ன வேலை? எங்கே வேலை, மாசத்துக்கு எத்தனை நாள் லீவு, இந்த வேலை அவனுக்கு எப்படிக் கிடைத்தது? மேலதிகாரியிடம் முதுகுத் தண்டு வளைய நடந்து கொள்கிறானா? என்றெல்லாம் திருப்பித் திருப்பிச் சொல்ல வேண்டியிருந்தது.

இந்த நாட்களில் அவனின் வழக்கமான உலகம் நைந்து போய் இருந்தது. நண்பர்கள், இலக்கியம், ஓவியம் என்று எல்லாமும் இல்லாத உலகத்தில் அவன் வாழ்ந்தான்

பவா. செல்லதுரை

எப்படி இருக்கும் என்பதற்கான ஒத்திகை யைப் போலிருந்த இதையே சகித்துக் கொள்ள முடியாமல் நெளிந்தான்.

ஆனாலும் இந்த மாதிரியான நேரங்களில் அவன் மீது விழுந்த மற்றவர்களின் பார்வை உ.்க்கமான பார்வையாக இல்லை. அது பெருமை மிக்கதாக, ஒருவித அன்பும் பிரிய மும் நிறைந்ததாக மாறி இருக்கிற பார்வை யாக அவனே நினைத்துக் கொண்டு, உள்ளுக்குள் சந்தோஷித்தான்

**க**ல்யாணத்திற்கு முந்தின நாள் காலை யிலிருந்தே போட்டோ எடுப்பது ஆரம்ப மாகி விட்டது. இந்த நெரிசல், அவர்கள் நிமிஷத்திற்கொருதரம் மாற்றி மாற்றிப் பேசிய பேச்சுக்கள், எதிலும் கொஞ்சமும் எரிச்சலடையாமல் மனோ அவர்களைக் கேமராவுக்குள் பதிவு செய்து கொண்டிருந் தான். ஒவ்வொரு படத்தை எடுத்து முடிக் கும் போதும் ஒருவித திருப்தி அவன் முகத் தில் படர்வதையும், இலேசான புன்னகை யால் அதை அங்கீகரிப்பதையும், அத்தனை சலசலப்புக்கிடையிலும் இவன் கவனித்த நிமிஷங்கள் இப்போது ஞாபகம் வந்தன.

கல்யாணத்துக்கு முந்தைய இரவு, கடைசி பஸ்ஸில் இறங்கி ஆட்டோ பிடித்து வந்த லலிதா அக்காவும், அவள் குழந்தைகளும் தான் போட்டோ எடுத்துக் கொள்வதில் அதிக அக்கறை செலுத்தினார்கள். பவுடரை முகமெல்லாம் அப்பிக் கொண்டு,

'எங்க ப்ரீத்தியை மட்டும் தனியா ஒன்று எடுங்க'

'ரமேஷையும் ப்ரீத்தியையும் சேத்து... டே எங்க குடும்பத்தோட நீயும் வந்து நில்லுடா' என்று அவனை வேறு இழுத்து இழுத்து நிற்க வைத்துக் கொண்டிருந்தாள். அக்கா வின் கல்யாணத்திற்கு முன் எடுக்கப்பட்டு, வீடு முழுவதும் நிறைந்திருக்கும் அவன்



போட்டோக்களை நினைவுபடுத்திப் பார்த்தான். இந்த லலிதா அக்காவுக்குத்தான் போட்டோ எடுத்துக் கொள்வதில் எத்தனைப் பிரியம்?

அந்த ஆல்பத்தில் ஒவ்வொரு படமாக நுட்பமாகக் கவனித்துக் கொண்டிருந்தான். அந்தப் படம், அதில் தெரிகிற சந்தோஷம், அதன் பின்னணி என்று ஒவ்வொன்றாய் ரசிக்க, கொஞ்ச நாட்களாய் வீட்டில் படர்ந்திருந்த மௌனம் நேரம் ஒதுக்கித் தந்தது.

இந்த மௌனத்திற்கும் இந்தப் புகைப் படங்களுக்குமான சம்பந்தங்கள் மனத்தை என்னவோ செய்தன. எவ்வளவு கஷ்டப் பட்டு மறக்க முயன்றும், கல்யாணத்தன்று நடந்த நிகழ்ச்சிகள் வரிசை வரிசையாய் வந்து மனத்தில் நின்று கொண்டன.

"யாருக்குத்தாண்டா கஷ்டம் இல்லை. கூடப் பொறந்தவளுக்கு ஒரு பட்டுப் பொடவை எடுக்க முடியல, அப்புறம் எதுக்குடா இவ்ளோ பெரிசு கல்யாணம். எங்கியாவது ரிஜிஸ்டர் ஆபீசுல போய் பண்ணிக்க வேண்டியதுதானே!'' என்று தன் குழந்தைகளை இழுத்துக் கொண்டு அந்த ராத்திரியில் பஸ்டேண்டை நோக்கி நடந்த லலிதா அக்காவின் முகத்தையும்; இதற்காகவே காத்திருந்தது போல அவசர அவசரமாய் ஒரு ஒயர்க்கூடையை எடுத்துக் கொண்டு நடந்த மாமாவின் முகத்தையும் இந்த ஆல்பத்தில் தேடிக் கொண்டிருந்தான்.

"நாங்க ஒண்ணும் சோத்துக்கு வக்கத்துப் போயிடலம்மா, கூடப் பொறந்தவளாச் சேன்னு பத்து நாளக்கி முன்னையே வந்தோம்பாரு என் புத்தியைச் செருப்பால அடிக்கணும்....'' என்ற சித்தியின் முகம் ஞாபகம் வந்தது.

''என்னை விடும்மா, அவ என்ன நெனைப்பா! இப்படி ஒரு பொடவையை எடுத்திருக்கானே! கூடப் பொறந்தவனுக்குச் செய்யற மரியாதையா இது? கொஞ்சம் எளச்சிட்டா ஒலகமே இப்படித்தான்மா''

---

# தலைமை தேர்தல் கமிஷனர்

டி. என். சேஷன் கூர்மையான அறிவுக்கு இணையாக முன்கோபமும் உடையவர் என்று கூறப்படுகிறது. எப்போதும் எல்லாவற்றிலும் கச்சிதத்தை எதிர்பார்ப்பவர்-ஃபைல்களின் அட்டையில் குறிப்பு எழுதக் கூடாது என்று தமது பணியாளர்களிடம் கண்டிப்பாகக் கூறியிருந்தார். அந்த உத்தரவை மீறிய ஒரு எழுத்தரிடம் ஃபைலின் விலை அபராதமாக வசூலிக்கப்பட்டது என்பது சேஷன் பற்றிச் சொல்லப்படும் சம்பவம்!

ராஜீவ் ஆட்சியின் போது சுற்றுச் சூழல் பாதுகாப்புத் துறைச் செயலராக விளங்கினார். ராஜீவைக் கொலை செய்ய (ராஜ்காட்டில்) ஒரு முயற்சி நடைபெற்றது நினைவிருக்கிறதல்லவா? அதற்குப் பிறகு சேஷனிடம் பிரதமரின் விசேஷப் பாதுகாப்புப் பொறுப்பும் வழங்கப்பட்டது. பின்னர் பாதுகாப்புத் துறைச் செயலராகப் பொறுப்பு ஏற்றார்.

1989 நாடாளுமன்றத் தேர்தலுக்கு



முன், காங்கிரஸின் வளர்ச்சிப் பணிகள் பற்றிய ஒளிபரப்புகள் வழங்குமாறு சேஷன் வலியுறுத்த முயன்றதாகவும், தேர்தலின் போது வாக்குச் சாவடிகள் கைப்பற்றப்பட்டது (நளினி சிங்கின் புரட்சிகரமான தயாரிப்பு) படமாக்கப் பட்டபோது அதனை ஒளிபரப்பக் கூடாது என்று தடுக்க முயன்றதாகவும் சில தூர்தர்ஷன் அதிகாரிகள் கூறியுள்ளனர்!

தேர்தலுக்கு இன்னும் இரண்டே மாதங்கள் உள்ள நிலையில், சேஷன் விருப்பு வெறுப்பின்றி எடுக்க வேண்டிய முக்கிய முடிவுகளை நாடே எதிர் நோக்கிக் கொண்டிருக்கிறது:

- சக்கர சின்னத்துக்கு உரிமை கொண்டாடும் ஜனதா தளம் Vs ஜனதா தளம்' (எஸ்) போராட்டத்துக்கு ஒரு முடிவு.
- 'பி. ஜே. பி. சின்னமான தாமரை தடை செய்யப்பட வேண்டும்' என்று இ. காங்கிரஸ் தலைவர் அர்ஜுன் சிங் விடுத்துள்ள முறையீடு.

இந்த முடிவுகளை விட, தேர்தலுக்குப் பிறகு வாக்குச் சாவடிகள் கைப்பற்றப்பட்டதாகவும், கள்ள வோட்டுக்கள் பதிவானதாகவும் குவியப் போகும் புகார்களைச் சமாளித்து முடிவுகள் எடுப்பதே சேஷனுக்குப் பெரிய பொறுப்பாக இருக்கும். இன்று அவர் அரசியல் தலைவர்களுக்குத் தலை வணங்க வேண்டிய அவசியமின்றிச் சுதந்திர அமைப்பின் தலைவராக இருப்பதால் இந்தப் பொறுப்புகளை அவர் சிறப்பாக நிறைவேற்றுவது சாத்தியமே.

நன்றி: எக்ஸ்பிரஸ்

**தமிழ்ப் புத்தாண்டு வாழ்த்துக்கள்**

# BALU JEWELLERS
# ACCEPT
# FIXED DEPOSITS

| | | |
|---|---|---|
| Period | : | 1 year and above |
| Rate of Interest | : | 18% per annum |
| Amount of Deposit | : | Rs. 5000/- and above |
| Interest payable | : | Monthly |

***For details call on :***



## Balu Jewellers
**GROUP CONCERNS**
**DIAMOND, GOLD & SILVER**

**72, USMAN ROAD, T. NAGAR,**
**MADRAS — 600 017**
**PHONE : 441812, 441741**

**Invest For Your Golden Future**

என்று பேசிய சேது அண்ணன்தான் இந்தப் புகைப்படங்களில் உலகத்துச் சந்தோஷங்களையெல்லாம் முகத்தில் ஒழுக விட்டுக் கொண்டு நிற்கிறான்!

இதிலெல்லாம் மனசு அறுந்து போனது. கல்யாணம் என்பது இத்தனை கசப்பானதாகவா இருக்கும்? அவனுடைய கவிதைகளின் உலகத்தைப் போல, ஓவியங்களின் உலகத்தைப் போல சந்தோஷம் மிக்கதில்லையா இது? இது புதுசு. இந்த அடிகளைத் தாங்கிக் கொள்ள முடியவில்லை. கன்னத்தைத் திருப்பிக் காட்டக் காட்ட, பலதிசைகளிலிருந்தும் அடி விழுகிறது.

"**இ**ன்னிக்கு ஷாப்பிங் போறோம் பொறப்படு.'' புறப்பட்டார்கள். அவள் மறுக்க மறுக்க அவளின் குளிர்ச்சியான நீள நீளமான விரல்களைப் பிடித்துக் கொண்டே நடந்தான். கர்வமாயிருந்தது. அந்த டைலர் கடையில் நின்று, இப்படி கைபிடித்து நடந்தவர்களைப் பார்த்துப் பெருமூச்சு விட்ட நாட்கள் நினைவுக்கு வந்தன. அவர்கள் அப்போது இவனை என்ன நினைத்திருப்பார்கள்?

இவனுக்கெல்லாம் வேலை கெடைச்சி....
அப்புறம் கல்யாணம் ஆகி.....

முகவரிகளற்ற என் விரோதிகளே.....
இதோ என் மனைவியின் விரல்களில்
நான்.

அன்று இரவு வீட்டிற்குத் திரும்பும்வரை உற்சாகத்தில் ஊறினான். அவள் அந்தப் புடைவையை அம்மாவிடம் காட்டாமலிருந்திருந்தால் அந்த சந்தோஷம் இன்னும் கொஞ்ச நாட்களுக்கு நீண்டிருக்குமோ?

''எப்படி அத்தை இருக்கு இந்தப் புடைவை? அவரு மொத மொத எனக்காக வாங்கித் தந்தது. வெலைதான் கொஞ்சம் ஜாஸ்தி. நானூத்தி அம்பது. ஜாக்கட்டோட தான்.....''

''பொடைவை நகையெல்லாம் அப்புறம் பாத்துக்கலாம். மொதல்ல இருபத்திரண்டாயிரம் கடனை அடைக்கிறவழியப்பாருங்க ரெண்டு பேரும். அவன்தான் எடுத்தான்னா நீ சொல்லத்தேவலை?'' என்கிற வார்த்தைகளைக் கொட்டும் போது இருந்த அம்மா இந்த ஆல்பத்தில் ஒரு இடத்திலும் பதிவாகவில்லை.

இப்போது அவனுக்குள் ஒரு வித்தியாசமான ஆசை ஊறியது. அப்பா, அம்மா, சேது அண்ணன், அண்ணி, சித்தி, லலிதா அக்கா என்று எல்லோரையும் இப்போது மறுபடியும் படங்கள் எடுத்து ஒரு ஆல்பம் போட்டுப் பார்க்க வேண்டும். இரண்டாவது ஆல்பத்திற்கான முகங்களின் விகாரங்களை நினைத்துப் பார்க்க முடியாமல் ஆல்பத்தை மூடினான்.

''சித்தப்பா எனக்கெங்க காட்பரிஸ் சாக்லெட்?'' என்று சிரிப்பொழுக எதிரில் அம்முக் குட்டி நின்றிருந்தாள். கல்யாண ஆல்பத்திலும் அம்முக் குட்டியின் முகம் மட்டும் இப்படியேதான் இருந்தது.

மங்கையர் மலர்

ஏப்ரல் '91

# கோலப்போட்டி கோலாகலமாக நடந்தது!

- பரிசு பெற்ற கோலங்கள்

அடுத்து ஒரு போட்டி!

# 'இதுதான் சமையலறை!'

முதல் பரிசு:
வீடியோ

ஜெயராஜ் வழங்கும் சிறுவர் சித்திரக் கதை

பெங்கால் ஸ்வீட்ஸ்

# செங்கழுளை தங்கபாலு

'கோடை ராஜா' என்ற பெயர்ப் பலகை வாசலில் மின்னியது.

''அண்ணனுக்குச் சொந்த ஊர் கொடைக் கானலா?''

''அட, நீ வேற... நம்ம கோடம்பாக்கம் ராமசாமிப்பா இவன். கொஞ்சம் மார்க் கெட் வந்ததும் 'கோடை ராஜா'ன்னு பேரு வெச்சுக்கிட்டான். இன்னிக்கு இன்டஸ்ட்ரியில இவன் காட்டிலேதான் அடை மழை. ஒரு டைட்டிலுக்கு மட்டும் பத்தாயிரம் வாங்கறான். இப்பப்ப டைட்டி லோட ஸ்டோரி லைன், ஸ்டார் செலக்‌ஷன் எல்லாத்துலயும் இவன் கையை வைக்கிறான். அதுக்குத் தனி ரேட்டு. போன வருஷம் இவன் பேரு வெச்ச படம் அத்தனை யும் ஹிட்!''

''சரி, சரி. நம்ம காரியத்தைக் கவனிங்க. உங்க சிபாரிசுல காக்க வைக்காம ஒடனே டைட்டில் கொடுக்க ஏற்பாடு பண்ணுங்க.''

உள்ளே நுழைந்தவர் அதே வேகத்தில் வெளியே திரும்பினார். ''பாம்க்ரோவ்ல எஸ். வி. என். பிக்சர்ஸுக்கு டைட்டில் டிஸ் கஷனுக்குப் போயிருக்காராம். அங்கேயே வரச் சொன்னாராம்.''

'''மஞ்சள் சட்டைக்காரன்' எஸ். வி. என். படந்தானுங்களே?''

''மஞ்ச சட்டைக்காரன், வெள்ளவேட்டிக் காரன், நம்ம ஊரு பெரியகருப்பன் எல்லாம் எஸ். வி. என். பேனர்தான். மூணும் ராஜா வோட டைட்டில். இன்னிக்குக் காலைல தந்தி பார்த்தியா? சுப்பையா செட்டியார் படத்துப் பூஜை விளம்பரம். 'தலைப்புத் தென்றல் கோடை ராஜாவின் கைவண்ணத் தில்... ''பொன்னுத் தாயி புள்ள பெத் தா!''ன்னு விளம்பரம் பண்ணியிருக்காங்க. அப்ப எப்படி மார்க்கெட்னு பாரு!''

''நம்ம படத்துக்கு டைட்டிலோட டைரக் ஷனையும் அண்ணனே பண்ணட்டுமே...!''

''ஒப்புத்துப்பாரான்னு தெரியலையே. நாலு மாசம் ஒரு படத்துக்கு வேலை செஞ்சு சம்பாதிக்கிறதை நாலு படத்துக்கு டைட்டில், கதை சொல்லியே சம்பாதிச்சுடுவாரே! ஸ்டோரி மட்டும் கேட்டுப்போமே!''

பாம்க்ரோவில் டிஸ்கஷன் முடிந்து வெளியே கார் ஏறப் போனவரை வழிமறித் தனர். ''என்ன ராமு. சௌக்கியமா?'' என்று விசாரித்தவரை வணங்கிவிட்டு, ''அண்ணே, இவரு கோயமுத்தூர்க்காரர். குப்புசாமின்னு பேர். படம் பண்ணலாம்னு வந்திருக்கார். அதான் மொதல்ல ஒங்ககிட்டே கூட்டியாந் துருக்கேன். அண்ணன்தான் டைட்டில் எடுத்துக் கொடுத்து, படத்தைத் துவக்கி வைக்கணும்.''

''கார்ல ஏறுங்க'' என்று அவர்களையும் தம் வண்டியில் ஏற்றிக் கொண்டு கேட்டார்: ''என்ன பட்ஜெட்?''

''முப்பது, முப்பத்தஞ்சுல முடிக்கணும்னு நினைக்கிறார்.''

''சரி, அப்ப மீடியந்தான்! ஒரு தெலுங்கு டப்பிங்கு சப்ஜெக்ட் இருக்கு. பார்ப் போமா?''

''நாம தமிழ்லேயே எடுக்கலாங்க!''

''இல்ல, தமிழ்ல எடுத்துட்டுத் தெலுங்குல டப் பண்ணிக்கலாம். அப்புறம் அங்கே நல்லா ஓடினா மறுபடியும் தமிழ்ல பண் ணிக்கலாம். மொதல்ல டைட்டில கவனிங்க. 'தெரு பொறுக்கி!' எப்படி, ஜனங்களைச் சுண்டி இழுக்கல?''

''என்னங்க, பேரே சரியில்ல!''

''அதாங்க, 'இதெல்லாம் ஒரு பேரா? சீ... தூ...'ன்னு மக்கள் இதைப் பத்திப் பேசிப் பேசி இதைப் பாப்புலராக்கிடுவாங்க. இதை விட ஒங்க படத்துக்குப் பெரிய விளம்பரம் என்னங்க?''



''சரி, ஆனா தெருப் பொறுக்கின்னு பேரு வச்சு என்ன கதையைச் சொல்லிப் படத்தை எடுக்கிறது?''

''தெருவில பொறுக்கிட்டு, திருடிப் பிழைச்சுட்டிருந்தவன் ஒரு பெண்ணால எப்படித் தெருத் தெருவா, சீ... படிப்படியா மாறுறான்னு காட்றோம். கொஞ்சம் செண்டிமெண்ட். நிறைய வயலன்ஸ். தெலுங்கு பார்முலா இது. ஓடும். பழைய கதை மாதிரியிருக்குன்னு யோசிக்கா தீங்க. கொஞ்சம் உல்டா பண்ணலாம். எப்படி?''

''வேணாங்க. லவ் ஸ்டோரி மாதிரி ஏதாவது பண்ணலாம்!''

'''எங்க ஊரு காதல்' எப்படி இருக்கு? இல்ல ஸ்கூல் பசங்க லவ்வுன்னா, ''லீவு வுட்டாச்சு''ன்னு வைக்கலாம். அதுவும் பிடிக்கலேன்னா பழைய பாட்டு ஒண்ணு டக்னு சொல்லுங்க...''

''அதெப்படிங்க... யோசிக்கணுமே!''

''சொல்லுங்க குப்புசாமிண்ணே, ஏதோ ஞாபகத்துக்கு வர்றது'' என்று உற்சாகப் படுத்தினார் ராமு.

''சரி... சித்தாடை கட்டிக்கிட்டுச் சிங் காரம் பண்ணிக்கிட்டு...''

கார்த்தி

''...மத்தாப்பு சுந்தரி ஒருத்தி... மத்தாப்பு சுந்தரி... 'மத்தாப்பு சுந்தரி,' எப்படி டைட்டில்? புதுமை, கவர்ச்சி எல்லாம் இருக்கு. பெரிய நடிகையாப் போடுங்க. ஸ்டோரியைக் கூட ஸ்டாருக்குத் தகுந்த மாதிரி எடுக்கலாம் பின்னாடி...''

''வேணாண்ணே, ஸ்டார் கால்ஷீட்டெல் லாம் கஷ்டம் இவருக்கு. மீடியம் பட் ஜெட்டா ரூரல் சப்ஜெக்டாச் சொல்லுங் கண்ணே!''



"'காயலாங்கடை கந்தசாமி'!"
"......"
"அதுவும் பிடிக்கலையா? விடுங்க. நம்மளுக்கு ஊர்ல என்ன வியாபாரங்க?"
"செங்க சூளைங்க."
"'செங்கசூளை தங்கபாலு'... இதாங்க டைட்டில். எப்படி?"
"நல்ல நேட்டிவிட்டி தெரியுது. மேலே சொல்லுங்க."
சிறிது யோசித்துவிட்டு ஆரம்பித்தார் ராஜா.
"இப்படி வச்சுப்போம். தங்கபாலு ஒரு செங்கசூளை வச்சிருக்கான். ஊர்ப் பண்ணையார் பொய் வழக்குப் போட்டு ஏமாத்தி, அதை அபகரிச்சிட்டு, உண்மை தெரிஞ்ச தங்கபாலுவோட அக்காவைக் கொன்னுடறான். 'இழந்த சூளையை மீட்டு, செங்கல்லோட உன்னையும் சேர்த்து வேக வைக்கல, நான் தங்கபாலு இல்ல'ன்னு சவால் விடறான் ஹீரோ. இங்கே கட் பண்ணி இடைவேளை..."
"பிரமாதம். ஆனா காதல்...?"
"இருக்கே. பண்ணையார் பொண்ணுக்கும் தங்கபாலுவுக்கும் காதல். நிறையப் பாட்டுங்க. அம்மன் பண்டிகை, வேப்பிலை டான்ஸ், கலர்ப் பொடி தூவுதல், தீ மிதிப்பு, சாமி திருவிழாவில் கூட்டத்தோட கூட்டமா அடியாளுங்களோட சண்டை, அப்புறம் கிளைமாக்ஸ்... இப்படிக் கொண்டு போவோம்."
**வ**ண்டி நின்றது. கோடை ராஜா இறங்கினார். வாசலில் தயாரிப்பாளர்கள் கூட்டம் தெரிந்தது. "இவ்வளவு போதுமா?" என்று கேட்டார்.
"கொஞ்சம் குழந்தைகளையும், கிராமத்துப் பெண்களையும் கவர் பண்ற மாதிரி ஏதாவது..."
"பெண்களுக்குத்தான் நிறைய இருக்கே. குழந்தைங்க சமாசாரத்துக்கு நாய், கோழி, ஆடு ஏதாவது ஒண்ணோட தங்கபாலுவோட அக்கா பொண்ணுன்னு ஒரு குழந்தை நட்சத்திரத்தைக் காட்டலாம். கோழி துரத்திட்டுப் போய் வில்லனை எரியற செங்கல் சூளையில் தள்ளற மாதிரி கூட க்ளைமாக்ஸ் வைக்கலாம்."
குப்புசாமி எழுந்து கைகூப்பி வணங்கினார்.
"அசத்திட்டீங்க! செங்கசூளை தங்கபாலு தான் டைட்டில். நீங்க சொன்னதுதான் கதை. வர்ற வெள்ளியில பூஜை போட்டுடலாம். இந்தாங்க, பணத்தைப் புடிங்க. அப்படியே அடுத்த படத்துக்கும் ஒரு டைட்டில் சொன்னீங்கன்னா பூஜை அன்னிக்கே 'எங்கள் அடுத்த வெளியீடு'ன்னு அதையும் சேர்த்து விளம்பரம் பண்ணிடலாம்."
"மனசு நிறையலயே ராசா!"
"டாப்பா இருக்குங்க டைட்டில்!"
"அட! அது டைட்டில் இல்லப்பா... நீ தந்த பணத்தைப் பார்த்ததும் என் மனசுல பட்டதைச் சொன்னேன்!"

# ஜில் பக்கம்

**அதிக செலவோ, சிரமமோ இன்றிக் கோடையில் குளிர்ச்சி பெறச் சில குறிப்புக்கள் தருகிறார் இருபது ஆண்டுகளாக உணவுத் தயாரிப்பு வகுப்புகள் நடத்தி வரும் செல்லம் கோபால கிருஷ்ணன்:**

## தர்பூஸ் மில்க் ஷேக்

தேவையான பொருள்கள்:

- தர்பூஸ் பழம் — ½ (சிறியசைஸ்)
- குளிர்ந்த பால் — 2 டம்ளர்
- சர்க்கரை — ¼ கப்
- ஐஸ் கிரீம் எஸன்ஸ் — சில துளிகள்
- ஐஸ் கட்டித் துண்டுகள்

செய்முறை:

தர்பூஸைச் சிறிய துண்டுகளாக வெட்டி, பால், சர்க்கரை, ஐஸ்துண்டு இவை எல்லாவற்றுடனும் சேர்த்து மிக்ஸியில் நுரை வரும் வரை அடிக்கவும். இதை உயரமான கண்ணாடி டம்ப்ளர்களில் ஊற்றி, அப்படியேயோ அல்லது இன்னும் சிறிது தர்பூஸ் துண்டுகளை மேலே மிதக்கவிட்டோ குடிக்கலாம். திடீரென்று வரும் விருந்தாளிகளுக்குக் கோடை காலத்தில் 'ஜில்' லென்று நொடியில் தயார்! சௌகரியப்பட்டால் ஒவ்வொரு டம்ப்ளரிலும் சிறிது ஐஸ்கிரீம் மிதக்க விட்டும் கொடுக்கலாம்.

## சம்மர் சாலட்

கோடைகாலத்தில் கறிகாய்களைக் காரமாக வதக்கிச் சாப்பிடுவதைவிட ஜில் லென்று சாலட் சாப்பிடுவது தான் உடம்புக்குக் குளிர்ச்சி; அடுப்படியிலும் சிரமப்பட வேண்டாம்! இதோ 'ஜில்'லென்று ஒரு சாலட் (ஆறு பேருக்கு). செய்வதற்குத் தேவையான நேரம் பத்தே நிமிடங்கள்.

தேவையான பொருட்கள்:

- வெள்ளரிக்காய் பெரிய சைஸ் — 1
- ஒன்றிரண்டாகப் பொடித்த வேர்க்கடலை — ½ கப்
- துருவிய தேங்காய் — ½ கப்
- கொத்துமல்லி — 1 கட்டு (சிறியசைஸ்) இதைப் பொடியாக நறுக்கிக் கொள்ளவும்
- உப்பு — தேவையான அளவு
- எலுமிச்சம்பழம் — 1
- மிளகுத் தூள் — 1 டீஸ்பூன்
- பச்சை மிளகாய் — 6 (இரண்டாகப் பிளக்கவும்)

செய்முறை:

**வெள்ளரிக்காயைச் சிறிய சிறிய துண்டுகளாக நறுக்கிக் கொள்ளவும். பிறகு உப்பு,**

மிளகு, எலுமிச்சம்பழச்சாறு, சேர்த்துக்" குலுக்கிவிட்டு, மற்ற சாமான்களையும் சேர்த்துக் கலந்து இரண்டு மணி நேரம் ஐஸ் பெட்டியிலோ, ஐஸ் மேலோ வைத்தால், சாலட் ரெடி.

**பிங்க் லஸ்ஸி**

தேவையான பொருட்கள்:

தர்பூஸ் துண்டுகள் — 1 கப்
புளிக்காத மோர் — 2 கப்
சர்க்கரை — ½ கப் (பொடி செய்தது)
ஐஸ்துண்டுகள் — 1 கப்
சிறிது மிளகுத் தூள்

செய்முறை:

இவை அனைத்தையும் மொத்தமாகச் சேர்த்து மிக்ஸியிலோ அல்லது மத்தினாலோ நுரை வரும் வரை நன்றாக அடித்துக் கலக்கி சிறிது ரோஸ் கலர் சேர்த்து ஷர்பத் போல் குடிக்கலாம். ஐந்து நிமிடத்திற்குள் தயார்! மோருக்குப் பதிலாக ஆரஞ்சு பழத்தை உபயோகித்து இதே முறையில் தர்பூஸ் ஆரஞ்சு 'ஷேக்' தயாரிக்கலாம்.



வாசகர் யோசனை:
நெல்லை குரவோன்,
பொட்டல்புதூர்.

## பத்தொன்பதாம் அத்தியாயம்

## வந்தான் குண்டோதரன்

# சிவகாமியின் சபதம்



படைகளின் முழக்கத்தைக் கேட்டதும், சற்றுப் பின்னால் வந்து கொண்டிருந்த ஆயனரும் புத்த பிக்ஷுவும் வேகமாக நடந்து வண்டியை நெருங்கி வந்தார்கள்.

முன்னணிப் படை கண்ணுக்குத் தெரிந்ததும், வண்டி சாலையில் ஒதுக்குப்புறமாக நின்றது. சிவகாமியும் அத்தையும் வண்டியிலிருந்து இறங்கி நின்று கொண்டார்கள். படை வரும் முழக்கம் அத்தையின் காதில் விழாதபடியால், மற்றவர்களைப் போல் அவளிடம் பரபரப்பு இல்லை.

புத்த பிக்ஷு சாலை ஓரத்து மரத்தின் பின்னால் தெரிந்ததும் தெரியாததுமாக நின்று கொண்டார். அவர் இராஜ வம்சத்தினரைக் கண்ணாலும் பார்ப்பதில்லை என்பது போன்ற விரதங்கள் கொண்டவர் என்பது தெரியுமாதலால் அவர் மறைந்து நிற்பது பற்றி மற்றவர்களுக்கு வியப்பு ஏற்படவில்லை.

ஆனால், எல்லோருக்கும் மனம் ஒருவாறு கலக்கமடைந்துதான் இருந்தது. வருகிறது என்ன படை? எங்கே போகிறது? எதற்காக?

தெற்கே இருந்து வருகிறபடியால் அது வாதாபிப் படையல்ல என்பது நிச்சயம். பின்னே, யாருடைய படை?

காஞ்சியிலிருந்து கிளம்பி வருகிற வழியில் நம் பிரயாணிகள் பெரும்பாலும் யுத்தப் போக்கைப் பற்றியும், யுத்த முடிவு என்ன ஆகும் என்பதைப் பற்றியும் பேசிக் கொண்டு வந்தார்கள். யுத்தத்தை நினைவூட்டும் காட்சிகளே எங்கெங்கும் தோன்றி வந்தன.

சாலையில் ஜனநடமாட்டம் அதிகமாயிருந்தது. எல்லோரும் தெற்கு நோக்கிப் போகிறவர்களாகவேயிருந்தார்கள். அநேகமாக அவர்கள் அனைவரும் காஞ்சி நகரிலிருந்தும் காஞ்சிக்குச் சுற்றிலுமுள்ள கிராமங்களிலிருந்தும் யுத்த நிலைமையை முன்னிட்டுப் புறப்பட்டவர்கள். அப்படிப் புறப்பட்டு வந்தவர்களிலே ஸ்திரீகள், குழந்தைகள், வயோதிகர்கள், ஆண்டிப் பரதேசிகள், கூனர், குருடர், காபாலிகர் முதலியோர் அதிகமாகக் காணப்பட்டார்கள்.

முக்கியமாகக் காபாலிகர்கள் வழியெல்லாம் பல்லவ இராஜ குலத்தைச் சபித்துக் கொண்டு போனார்கள். காஞ்சி நகரில் கள்ளுக் கடைகளை மூடித் தங்களை நகரை விட்டுத் துரத்திய குமார சக்கரவர்த்தியின் பேரில் அவர்கள் தங்களுடைய சாபங்களுக்குள்ளே மிகக் கடுமையான சாபங்களைப் பொழிந்து கொண்டு போனார்கள். நராதமர்களுக்குள்ளே அதமனான மாமல்ல நரசிம்மன் என்னும் சண்டாளனை ரணபத்திர காளிக்குப் பலிகொடுத்து, தாங்கள் மதுபானம் செய்யும் மாட்டுக் கொம்பிலே அவனுடைய இரத்தத்தை ஏந்திக் குடித்துத் தங்களுடைய பயங்கரமான மரண தாகத்தைத் தணித்துக் கொள்ளப் போவதாக அவர்களில் பலர் உரத்த சப்தம் போட்டுச் சபதம் செய்தார்கள். இன்னும் சிலர், மாமல்ல நரசிம்மனையும் தளபதி பரஞ்சோதியையும் சேர்த்துக் கட்டி மயான

ருத்திரனுக்குப் பிரீதியாக உயிரோடு கொளுத்தி அவர்களுடைய எலும்புச் சாம்பலைத் தங்கள் உடம்பெல்லாம் பூசிக் கொண்டு உஷ்ணம் தணியப் போவதாகச் சபதம் செய்தார்கள். இந்தச் சாபங்கள், சபதங்கள் எல்லாம் பிராகிருத பாஷையிலும் வேறு கலப்பு மொழிகளிலும் செய்யப்பட்டதானது, அந்தக் காபாலிகர்கள் வட தேசத்திலிருந்தும் மேற்குப் பிராந்தியத்திலிருந்தும் வந்தவர்கள் என்பதைத் தெரியப்படுத்தியது.

சிவகாமிக்கு ஆங்காங்கு வண்டியில் பிரயாணம் செய்தபடியாலும், அவளுடைய உள்ளம் வேறு வேறு உலகங்களில் சஞ்சரித்துக் கொண்டிருந்தபடியாலும், அவளுடைய காதில் அந்தப் பயங்கர சாபங்கள் ஒன்றும் விழவில்லை. ஆனால் ஆயனருடைய காதில் அவை எல்லாம் கர்ண கடூரமாக விழுந்தன. அவற்றைக் கேட்கச் சகிக்காமல் அவர் காதைப் பொத்திக் கொண்டார்.

புத்த பிக்ஷுவின் செவிகளுக்கு மட்டும் அந்தச் சாபங்கள் எவ்வித அருவருப்பையும் அளித்ததாகத் தெரியவில்லை. அதற்கு மாறாக, அவருடைய முகத்தின் கடூரத்தை இன்னும் க்ரூரமாக்கிக் கொண்டு சில சமயம் புன்னகை தோன்றியது.

பிக்ஷு ஒரு தடவை காபாலிகர் கூட்டத்தில் புகுந்து பேசிக் கொண்டிருந்து விட்டு, வெளி வந்து ஆயனரை அணுகியதும், "ஆயனரே! எப்போதாவது நான் புத்த சமயத்தைத் துறந்து சைவனாகும் பட்சத்தில், காபாலிகத்திலேயே சேர்வேன்!" என்றார்.

இதைக் கேட்டு ஆச்சரியமடைந்த ஆயனர், "சுவாமி! அத்தகைய எண்ணம் தங்களுக்கு ஏன் வர வேண்டும்? புத்த சமயத்தின் மீது தங்களுக்கு என்ன கோபம்? யுத்தங்களினால் ஏற்படும் சங்கடங்களையும் துன்பங்களையும் பார்க்கப் பார்க்க, புத்த பகவான் காட்டிய அஹிம்சா மார்க்கமே உத்தமமான மார்க்கம் என்றல்லவா எனக்கே இப்போது தோன்றி வருகிறது!" என்றார்.

"அதனாலேதான் நானும் சொல்லுகிறேன். நீங்கள் கால சம்ஹார மூர்த்தியைக் கைவிட்டுப் புத்த பகவானை அடைவதாயிருந்தால், அதற்குப் பிரதியாகக் காபால ருத்திரமூர்த்திக்கும் ஓர் அடியார் வேண்டுமல்லவா?" என்று நாகநந்தி கூறியது ஆயனருக்கு மேலும் மனக் குழப்பத்தை உண்டாக்கிற்று.

சாலையில் அபூர்வமாய்த் தெற்கேயிருந்து வரும் பிரயாணிகள் சிலர் காணப்பட்ட போது அவர்களைக் காஞ்சிக்குப் பக்கமிருந்து வருகிறவர்கள் நிறுத்தி "தெற்கே என்ன விசேஷம்?" என்று கேட்பார்கள். அவர்கள் மறுமொழி சொல்லிவிட்டுக் காஞ்சி நிலைமையைப் பற்றி விசாரிப்பார்கள். இத்தகைய பேச்சுக்களையெல்லாம் நாகநந்தி ஆங்காங்கு நின்று வெகு சுவாரஸ்யமாகக் கவனிப்பார்.

இப்படி ஒரு தடவை கூட்டத்தில் நின்று பேச்சு கேட்ட பிறகு, நாகநந்தி, ஆயனர் சிவகாமி இருவர் காதிலும் விழும்படியாக, "நாம் ஒன்று நினைக்க யுத்ததேவன் வேறொன்று நினைக்கிறான் போலல்லவா தோன்றுகிறது? உத்தேசித்தபடி நமது பிரயாணம் நடைபெறாது போலிருக்கிறதே!" என்றார்.

"அப்படியா? புத்த தேவர் என்ன கருணை செய்கிறார்? அவருடைய திருவுள்ளம் என்ன?" என்றார் ஆயனர்.

"அத்தையைப் போல் அப்பாவுக்கும், காது மந்தமாகி வருகிறது!" என்று கூறிச் சிவகாமி புன்னகை புரிந்தாள்.

அந்த நகைச்சுவையை அனுபவித்த நாகநந்தி செவிடருடன் பேசுவது போன்ற உரத்த குரலில், ஆயனரே! நான் புத்த தேவரைச் சொல்லவில்லை; யுத்த தேவனைச் சொல்கிறேன்" என்றார்.

"அப்படியா? யுத்த தேவன் என்ன சொல்கிறார்? நம்மை வழிமறிக்கப் போகிறாரா?"

"அப்படித்தான்!" என்று சொன்ன நாகநந்தி மறுபடியும் மெல்லிய குரலில் கூறினார்: "பல்லவ இராஜ்யத்துக்கு எதிர்பாராத ஆபத்துக்கள் எல்லாம் வந்து கொண்டிருக்கின்றன. மேற்கே இருந்து கங்க நாட்டுச் சைனியம் படை எடுத்து வந்து எல்லைப்புறத்தில் நிற்கிறதாம். தெற்கே பாண்டிய மன்னர் பெரும்படை திரட்டிக் கொண்டு வருகிறாராம். பாண்டியர் சைனியம் கிழக்குச் சோழ நாட்டு எல்லைக்கே வந்து விட்டதாம், வடதிசையிலிருந்து வரும் வாதாபி சைனியத்தைப் பற்றித்தான் உங்களுக்கே தெரியும். பல்லவ சைனியம் தப்பிப் பிழைப்பதற்கு இன்னும் ஒரே ஒரு திசைதான் பாக்கியிருக்கிறது.....!"

"எந்தத் திசையைச் சொல்லுகிறீர்கள்?"

அமரர் கல்கி

என்று ஆயனர் கேட்டார்.

"கிழக்குத் திசையைத்தான் சொல்லுகிறேன்; கிழக்கே சமுத்திர ராஜனிடம் வேணுமானால் மகேந்திர பல்லவர் அடைக்கலம் புகலாம்."

"சமுத்திரத்திலே விழுந்து சாகலாம் என்கிறீர்களா? அடிகளே! உங்களுடைய இருதயம் இப்படி ஈரப்பசையே இல்லாத பாலைவனமாக எப்போது ஆயிற்று?" என்று ஆயனர் கோபக் குரலில் கூறினார்.

"ஓ! மகா ஸ்தபதியே! என்னை அவ்வளவு நீச குணமுள்ளவன் என்று ஏன் தாங்கள் கருத வேண்டும்? பல்லவ குலம் கடல் தந்த குழந்தையிலிருந்து தோன்றிய தாயிற்றே? இப்போது அந்த வம்சத்துக்கு ஆபத்து வந்திருக்கும் சமயத்தில் அந்தக் கடல் அடைக்கலம் தராதா என்று சொன்னேன். கடலில் அடைக்கலம் என்றால் கடலில் முழுகி விடுதல் என்றுதான் பொருளா? கப்பல் ஏறி இலங்கைக்குப் போய்த் தப்பலாமல்லவா? ஆனால், அதற்கும் ஓர் ஆபத்து இருக்கிறது. இலங்கையில் இப்போதுள்ள அரசன் மகேந்திர பல்லவரின் அருமைச் சிநேகிதன்தான். ஆனால், அவனை இலங்கைச் சிம்மாசனத்திலிருந்து தள்ளிவிட ஒரு பெருங்கலகம் அங்கே நடக்கிறதாம். பாவம்! பல்லவர்களுக்கு வந்திருக்கும் கஷ்ட காலம் அவர்களுடைய சிநேகிதர்களைக் கூடப் பிடிக்கிறதே" என்று கூறி விட்டுப் புத்த பிக்ஷு ஒரு கோரச் சிரிப்புச் சிரித்தார்.

ஆயனர் அப்போதும் விட்டுக் கொடுக்காமல், "எதற்காக மகேந்திர பல்லவர் இலங்கைக்கு ஓட வேண்டும்? காஞ்சிக் கோட்டை இருக்கிறதல்லவா?" என்றார்.

"ஆமாம்; காஞ்சிக்கோட்டை இருக்கிறது. அதில் எட்டு மாதத்துக்கு முன்பு பயங்கொள்ளிப் பல்லவன் ஒளிந்து கொண்டது போல் இப்போது அவனுடைய தந்தையும் ஒளிந்து கொள்ளலாம். வாதாபிப் படை வழி தங்காமல் வந்திருந்தால் கோட்டை ஒரு நொடியில் தகர்ந்து போயிருக்கும். இப்போது கோட்டை பலப்பட்டு விட்டது. ஆகையால், சில காலம் கோட்டைக்குள் பத்திரமாயிருக்கலாம். வாதாபிப் படை ஆறு மாதமாக வடபெண்ணைக் கரையில் என்ன செய்து கொண்டிருந்தது என்றுதான் தெரியவில்லை!" என்றார் புத்த பிக்ஷு.

இந்த வார்த்தைகள் எல்லாம் சிவகாமியின் செவிகளில் புண்ணில் கோல் இடுவது போல் விழுந்தன.

'கடவுளே! நாக்கிலே விஷமுள்ள இந்த நாகநந்தியின் கர்வத்தை அடக்க மாட்



**"குருவே! நான் என்ன தவறு செய்தேன்! என்னை இப்படி அநாதையாய்க் கைவிட்டு விட்டுச் சொல்லாமல் புறப்பட்டு வந்துவிட்டீர்களே!" என்று அலறினான் குண்டோதரன்.**

டாயா?' என்று வேண்டிக் கொண்டாள்.

புத்த பிக்ஷுவின் விஷயத்தில் சிவகாமியின் மனநிலை சஞ்சலமுள்ளதாயிருந்தது. அவரிடம் காரணமில்லாத அருவருப்பும் இன்னதென்று தெரியாத பயமும் அவள் மனத்தின் ஆழத்தில் குடி கொண்டிருந்தன. மாமல்லரைப் பற்றி அவர் கூறிய செய்திகளைக் கேட்ட பின் அவரிடம் அவளுடைய அருவருப்பு அதிகமாயிற்று.

இன்னொரு பக்கம் புத்த பிக்ஷுவின் விசாலமான உலக அனுபவமும், ஆழ்ந்த கலைஞானமும் அவரிடம் அவளுக்குப் பக்தியையும் மரியாதையையும் உண்டு பண்ணியிருந்தன. மேலும், தூர தூர தேசங்களெல்லாம் சென்று அங்கங்கே மகா சபைகளில் நாட்டியம் ஆடி, 'பரத கண்டத்தின் ஒப்பற்ற நடன ராணி' என்று பெயரும் புகழும் பெறுவது பற்றிப் பிக்ஷு அடிக்கடி கூறி அவளுடைய உள்ளத்தில் திக்விஜயப் பகற்கனவுகளை உண்டு பண்ணியிருந்தார். அதெல்லாம் அவருடைய உதவியினாலேதான் சாத்தியமாகக் கூடும் என்பதும் உலகமறியாத சாதுவான தன் தந்தையினால் ஆகாது என்பதும் அவளுக்குத் தெரிந்திருந்தன. எனவே புத்த பிக்ஷுவிடம் தன் மனத்தில் குடிகொண்டிருந்த அருவருப்பைப் போக்கிக் கொண்டு அவரிடம் சிநேகபாவத்தை வளர்த்துக் கொள்ள வேண்டுமென்று அவள் முடிவு செய்திருந்தாள்.

ஆனாலும், புத்த பிக்ஷு பல்லவ குலத்தைப் பற்றியும் மாமல்லரைப் பற்றியும் அடிக்கடி கூறிய வசைமொழிகள் அவளுடைய சிநேக முயற்சிக்குக் குறுக்கே நின்று அருவருப்பை வளர்த்து வந்தன.



**வா**தாபிப் படை வடபெண்ணைக் கரையில் ஆறு மாதமாக இருந்தது பற்றிப் புத்த பிக்ஷு குறிப்பிட்டதும் சிவகாமி ஆத்திரமான குரலில், "சுவாமி! வடபெண்ணைக்குப் போய் வாதாபிப் படைகளை நீங்களே கையைப் பிடித்து அழைத்துக் கொண்டு வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே! பல்லவ குலத்தின் மேல் உங்களுக்கு என்ன அவ்வளவு கோபம்?" என்று கேட்டாள்.

பிக்ஷு சாந்தமான குரலில், "பல்லவ குலத்தின் மேல் எனக்கு என்னத்திற்கு அம்மா கோபம்? அவர்களுடைய கையாலாகாத்தனத்தினால் இப்போது நாம் நினைத்து வந்தபடி பிரயாணம் செய்ய முடியாமலிருக்கிறதே என்றுதான் வருத்தமாயிருக்கிறது. சிதம்பரத்துக்குப் போய் அங்கிருந்து சோழ நாட்டு ஸ்தலங்களைத் தரிசனம் செய்து கொண்டு நாகப்பட்டினத்தில் நடக்கப் போகும் மகா புத்த சங்கத்துக்கு உங்களை அழைத்துப் போவதாகச் சொன்னேனல்லவா? இப்போது பாண்டிய சைனியம் சோழ நாட்டில் படையெடுத்து வருவதாகத் தெரிகிறது. இப்படிப்பட்ட சமயத்தில் நாம் சோழ நாட்டுக்குப் போவது உசிதமா என்றுதான் யோசிக்கிறேன்" என்று கூறினார்.

"பின்னே, நாம் என்னதான் செய்யலாம் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்?" என்று ஆயனர் கேட்டார்.

"கெடில நதிக்கரையில் ஓர் அமைதியான இடம் இருக்கிறது. தங்களுடைய சிற்ப வேலைகளை நடத்துவதற்கும் அங்கே நிறைய வசதி உண்டு. குன்றுகளும் பாறைகளும் ஏராளமாய் இருக்கின்றன. இந்த யுத்தக் குழப்பமெல்லாம் முடியும் வரையில் நீங்கள் அங்கே இருக்கலாமென்று நினைக்கிறேன்" என்றார் பிக்ஷு.

பிக்ஷுவிடம் வரவரச் சந்தேகம் அதிகம் கொண்டு வந்த ஆயனர் "போகப் போகப் பார்த்துக் கொள்ளலாம், சுவாமி!" என்றார்.

**இ**ப்படியெல்லாம் அவர்களுக்குள் இரண்டு தினங்களாகச் சம்பாஷணை நடந்திருந்தபடியால், எதிரே படை வரும் சப்தம் கேட்டதும் ஒருவேளை படையெடுத்து வரும் பாண்டிய சைனியந்தானோ அது என்று ஆயனரும் சிவகாமியும் ஐயுற்றார்கள். ஆனால், முன்னணியில் பறந்த கொடி

---



## அருள்வாக்கு

**ஏது இன்றியமையாதது, எதெது இல்லாவிட்டாலும் வாழ்க்கை நடத்த முடியும்; எதெதுகள் இல்லாமலும் நம் அப்பன் பாட்டனெல்லாரும் சந்தோஷமாகவே வாழ்ந்தார்கள் என்று ஆலோசித்துப் பார்த்துத் தேவைகளைக் குறைத்துக் கொண்டு வாழ வேண்டும். முதலில் சிரமமாக இருக்கும். சபலங்கள் இழுத்துக் கொண்டுதான் இருக்கும். இருந்தாலும் தாயான அம்பாளை வேண்டிக் கொண்டு, அநுக்ரஹ பலத்தில் தேறித் தெளிந்து ஜயிக்க வேண்டும். அப்புறம்தான் இந்த எளிய வாழ்க்கையில் எத்தனை நிம்மதி இருக்கிறதென்று தெரியும். போக்ய வஸ்துக்களைத் தேவை தேவை என்று சேர்த்துக் கொண்டே போனால் அப்புறம் வீடு பெரிசாகப் பார்க்க வேண்டியிருக்கிறது; அதனால் வாடகைச் செலவு ஏறுகிறது. இப்படி ஒன்றிலிருந்து ஒன்றாக நமக்கே வருமானம் போதாமல் ஆக்கிக் கொண்டால் பரோபகாரம் பண்ணி நம் கர்மாவைக் கழுவிக் கொள்வதெப்படி? அநாவசியங்களை எல்லாம் கழித்துக் கட்டிவிட்டால் நமக்கும் நிம்மதியாக, பிறருக்கும் உதவியாக ஜன்மாவை உயர்த்திக் கொள்ளலாம்.**

**அம்பாள் தாயாக, அந்த ஒரே தாயாருக்கு நாம் அத்தனை பேரும் குழந்தைகளாக, ஒரு குடும்பத்தில் பத்துக் குழந்தைகள் இருந்தால் அவை ஒட்டிக் கொண்டு இருக்கிறாற் போல், ஒருத்தருக்கொருத்தர் உபகாரம் பண்ணிக் கொண்டு வாழலாம். இந்த உபகாரம்தான் என்று ஒரேயடியாக பண்ண வேண்டியதில்லை. அவரவர் ஸ்திதியில் எது ஸாத்யமோ அந்த உபகாரத்தைச் செய்து கொண்டு ஆனந்தமாக வாழலாம்.**

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.**

யில் ரிஷபத்தைப் பார்த்ததும் பல்லவர் படை என்று எல்லாருக்கும் தெரிந்து விட்டது. படை வீரர்கள் எழுப்பிய கோஷங்கள் இதை உறுதிப்படுத்தின.

''வாதாபி அழிக!''

''புலிகேசிக்கு நாசம்!'

''துர்விநீதனுக்குத் துர்மரணம்!'' என்னும் கோஷங்களையும்,

''காஞ்சி வாழ்க!''

''மகேந்திர பல்லவர் வாழ்க!''

''மாமல்லரின் வீரத் தோள் வெல்க!'' என்னும் முழக்கங்களையும் மாற்றி மாற்றி அந்த வீரர்கள் எழுப்பிக் கொண்டு கம்பீரமாக நடந்தார்கள்.

இந்தக் குரல் ஒலிகளுக்கு இடை இடையே பேரிகை முதலிய யுத்த வாத்தியங்கள் எட்டுத் திக்கும் எதிரொலிக்கும்படி ஆர்த்தன.

மேற்படி கோஷங்கள் எழுந்த போது மரத்தின் பின்னால் மறைந்திருந்த நாகநந்தியடிகளின் முகத்தை யாரும் பார்க்கவில்லை. பார்த்திருந்தால், படமெடுத்து ஆடும் நாக ஸர்ப்பத்தின் தீக்ஷண்யமான கண்களிலிருந்து தீப்பொறி கிளம்புவது போல் அவருடைய கண்களிலிருந்தும் பொறி கிளம்பிக் கொண்டிருந்ததைக் கவனித்திருக்கலாம்.

படை சின்னப் படைதான்; நாற்பது ஐம்பது குதிரைகளும் இரண்டாயிரம் காலாட்களும் இருக்கலாம். எனவே, அரை நாழிகைக்குள் நமது பிரயாணிகள் நின்றிருந்த இடத்தைத் தாண்டி படை சென்று விட்டது.

சற்று முன் கலகலப்பாக இருந்த சாலையில் நிசப்தம் குடிகொண்டது. பெரிய நகரத்திலிருந்து திடீரென்று நிர்மானுஷ்யமான காட்டுக்குள் வந்து விட்டது போல் தோன்றியது.

படை வீரர்கள் எழுப்பிய கோஷங்களில் ''மாமல்லர் வாழ்க!'' ''மாமல்லரின் வீரத் தோள் வெல்க!' என்னும் கோஷங்கள் சிவகாமியின் உள்ளத்தில் பெருங் கிளர்ச்சியை உண்டுபண்ணியிருந்தன. மாமல்லர் பயங்கொள்ளியாயிருந்தால் பல்லவ வீரர்கள் அவரைப் பற்றி இம்மாதிரி வீர கோஷங்களைச் சொல்வார்களா?

''ஆயனரே, போகலாமா? அசோகபுரம் இன்னும் ஒரு நாழிகை தூரம் இருக்கிறது!'' என்று நாகநந்தியின் குரல் கேட்டது.

''ஆகா! போகலாமே! சிவகாமி! வண்டியில் ஏறிக் கொள். அத்தையையும் ஏறச் சொல்' என்றார் ஆயனர்.

சிவகாமி வண்டியில் ஏறாமலே,



''பத்திரிகை ஆபீஸிலிருந்து உங்களிடம் விளக்கம் கோரிக் கடிதம் வந்திருக்கு...''

''என்னன்னு...?''

''அறிமுக எழுத்தாளரின் கதைக்கு, 'அவரின் கதைகளிலேயே, இது மணி மகுடம்'ன்னு 'வாசகர் கடிதம்' எழுதிப் போட்டதுக்கு...''

— ஆர். வசந்தகுமார்.

''அப்பா! இந்தப் படை வீரர்கள் எங்கே போகிறார்கள்?'' என்று கேட்டாள்.

''எனக்குத் தெரியவில்லை, அம்மா! பார்த்தால், யுத்தத்துக்குப் போகும் படையாகத் தோன்றுகிறது. அந்த வீரர்கள் செய்த யுத்த கோஷங்களைக் கேட்ட போது எனக்குக் கூடக் கல்லுளியைப் போட்டு விட்டுக் கத்தியை எடுத்துக் கொள்ள வேண்டுமென்று தோன்றியது. எதற்காக இப்படிப் பயந்து ஊரை விட்டு ஓடுகிறோம் என்று வெட்கமாயிருக்கிறது'' என்றார் ஆயனர்.

''ஆயனரே! இத்தகைய சஞ்சலம் உமக்கு எப்போது வந்தது? சற்று முன்னால் அஹிம்சா மூர்த்தியான புத்த பகவானிடம் உமது அபார பக்தியைத் தெரிவித்துக் கொண்டீரே?'' என்றார் புத்த பிக்ஷு.

அந்தச் சமயத்தில், சாலையில் படை மறைந்த திக்கிலிருந்து ஒரு தனிக் குதிரை வரும் சப்தம் 'டக்டக்' 'டக்டக்' என்று கேட்டது. வர வர அது சமீபித்து வந்தது.

வருகிறது யார் என்று தெரிந்து கொள்வதில் அவர்கள் எல்லாருக்குமே ஆவல் இருந்தபடியால் நின்ற இடத்திலேயே நின்றார்கள்.

குதிரை அவர்களுடைய அருகில் வந்தது. குதிரையின் மேல் இருந்தது இன்னார் என்று தெரிய வந்த போது ஆயனருக்கும் சிவகாமிக்கும் உண்டான வியப்புக்கு அளவேயில்லை.

ஏனெனில், குதிரை மேல் இருந்தவன், அவர்களுடைய அரண்ய வீட்டிற்குப் பரஞ்சோதி வந்த தினத்தில் அவர்களிடம் சொல்லிக் கொள்ளாமலே மாயமாய் மறைந்த குண்டோதரன்தான்.

''குருவே! நான் என்ன தவறு செய்தேன்! என்னை இப்படி அநாதையாய்க் கை விட்டு விட்டுச் சொல்லாமல் புறப்பட்டு வந்து விட்டீர்களே!'' என்று அலறினான் குண்டோதரன்.

(தொடரும்)

# இருளில் துளிர்த்தது

**கோ**யிலிலிருந்து திரும்பும் வழியில் தான் சாந்திக்கு அந்த எண்ணம் சட்டெனத் தோன்றியது.

அட... எப்படி மறந்து போனேன்? ஒவ்வொரு வியாழக்கிழமையும் இராக வேந்தர் மடத்துக்குச் செல்வது அவள்



# விழிப்பு!

வழக்கம். வீட்டிலிருந்து பத்து நிமிட நடையில் இருந்தது கோயில்.

இன்றும் சாயந்திர டிபனைச் செய்து வைத்துவிட்டு, நாலரை மணிக்குக் கிளம்பினாள். ஐந்தரை மணிக்குள் அவள் கணவன் வேணு அலுவலகத்திலிருந்து திரும்பிவிடுவான். அதனால் சீக்கிரமாகத் தரிசனம் முடித்து வேக நடையில் திரும்பிக் கொண்டிருந்தாள்.

அப்போதுதான் இது தோன்றியது.

போனமாதம் இருபதாம் தேதியில் குளித்தது. இன்று தேதி இருபத்தைந்து. ஐந்து நாட்கள் தள்ளிப் போய் விட்டதே!

'கடவுளே! இந்தத் தடவையாவது அருள் புரியப்பா!

திருமணமாகி ஐந்து வருடங்கள் ஓடிவிட்டன. முதல் வருடத்தில் ஒவ்வொரு மாதமும் எதிர்பார்ப்புடன் தோன்றி ஏமாற்றத்துடன் முடிந்தது. பிறகு மெதுவாக மாமியார் இடித்துக்காட்ட ஆரம்பித்து. அதுவே வழக்கமாகிவிட்டது.

இது மட்டும் நிச்சயமாகிவிட்டால்....!

சாந்தியின் உள்ளத்தில் சந்தோஷம் குமிழியிட்டது.

மாமியாரின் பார்வைக்குத் தலைகுனிய வேண்டாம்.

எதுவும் வாய் வார்த்தையாய்க் கேட்காவிட்டாலும் ஏமாற்றத்துடன் முகத்தைத் திருப்பிக் கொள்ளும் கணவனைப் பார்த்துத் தாழ்வு உணர்ச்சி உண்டாகாது.

வேண்டுமென்றே குத்திக் கிளறும் சொந்த பந்தங்களுக்கு முன் வருக்கப்பட அவமியம் ஏற்படாது.

விருந்தினர் வீட்டு விஷேசங்களில் கூனிக் குறுகி ஒதுங்கும் தேவை இருக்காது.

சாந்தியின் உள்ளம் சிறகடித்துப் பறக்கத் தொடங்கியது.

கணவனிடம் இதைச் சொல்லும் போது அவர் முகம் எப்படி மலரும் என்பதைக் கற்பனை செய்து பார்த்தாள்.

பேரனையோ, பேத்தியையோ நீண்ட நாட்களாக எதிர்பார்க்கும் மாமியார் எப்படி சந்தோஷப்படுவாள் என்று நினைத்துப் பார்த்தாள்.

ஒரு வேளை இத்தனையும் பொய்த்து விட்டால்...? நெஞ்சு நடுங்கியது சாந்திக்கு.

அவர்களிடம் இந்த விஷயத்தை இப்போதே சொல்வதா. வேண்டாமா என்று குழம்பினாள்.

அதற்குள் வீடு வந்துவிடவே சிந்தனையுடன் வாசல்படி ஏறினாள்.

உள்ளே பேச்சுக் குரல் கேட்டது. அலுவலகத்திலிருந்து திரும்பி விட்டாரா?

பேச்சில் தன் பெயர் அடிபடவே தயங்கி நின்றாள்.

மாமியார் குரல் தொடர்ந்தது.

''எத்தனை நாளைக்குடா விஷயத்தை இழுத்தடிக்கிற? பட்டுனு போட்டு உடைச்

கிருஷ்ணா

சிட வேண்டியதுதானே சாந்தியிடம்.''

''அது வந்தும்மா... இந்த வாரத்துக்குள்ளே சொல்லிடறேன். ஆரம்பிக்கத் தயக்கமாயிருக்கு.''

''படிச்சிருக்கியே தவிர சாமர்த்தியம் பத்தாதுடா உனக்கு. இல்லாட்டி, மலடிப் பொண்ணோட இத்தனை நாள் பொறுமையாகக் குடும்பம் நடத்துவியா?''

''சரிம்மா விஷயத்துக்கு வா.''

''கொஞ்சநாள் போய் அவங்கம்மா வீட்டுல இருந்திட்டு வரச் சொல்லு அவளை. அவ போனப்புறம் அவ அப்பனுக்குக் கடிதாசு கொடுத்து அனுப்பிச்சுடுவோம். ஊர்ல உலகத்துல நடக்காததையா உன்னைச் செய்யச் சொல்றேன். குழந்தை இல்லாததைக் காரணம் காட்டி அவளை ஒதுக்கி விடலாம். அப்புறம் நீ புதுமாப்பிள்ளைதான்'' என்று சொல்லி, மாமியார் பரிகாசமாகச் சிரிக்கவும் உறைந்து போனாள் சாந்தி.

கண்களை இருட்டிக் கொண்டு வந்தது. விழுந்து விடாமல் இருக்கும் பொருட்டு வாசல் கதவைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டாள்.

**க**தவைத் தட்டும் ஒலி கேட்டதும் புத்தகத்திலிருந்து நிமிர்ந்தாள் சாந்தி.

அம்மாவும், அப்பாவும் கடைத்தெருவுக்குப் போயிருந்தனர்.

'அவர்கள்தானோ?' என்று யோசித்தபடி கதவைத் திறந்தாள்.

அவள் கணவன் வேணுதான் நின்று கொண்டிருந்தான்.

உள்ளூரிலேயே இருக்கும் அவள் பிறந்தகத்திற்குக் கணவன், மாமியார் இருவரின் நாடகத்துக்கு உடன்பட்டுப் புறப்பட்டு வந்து பதினைந்து நாட்களாகி விட்டன.

''என்ன புத்தகம் சாந்தி?'' என்று வேணுவே முதலில் மௌனத்தைக் கலைத்தான்.

பேசாமல் புத்தகத்தின் முன் அட்டையை அவன் கண் எதிரில் காட்டினாள்.

''என்ன இது? பாங்க் எக்ஸாம் கைடா? எதுக்கு நீ படிக்கிறே இதை?''

''அடுத்த மாசம் ஒரு தேர்வு இருக்கு. கிளார்க் வேலைக்கு.''

''நீ வேலைக்குப் போகப் போறியா? எதுக்கு? என்னிடம் கூடச் சொல்லலியே. ஆளே மாறிட்டே நீ..'' என்று குற்றஞ் சாட்டியவனை நேராகப் பார்த்தாள்.

''யாரு மாறிட்டாங்கன்னு அவங்க அவங்களுக்கே தெரியும்.''

''என்ன சொல்றே?''

''என் சொந்தக் காலில் நிற்கறதுக்காக வேலைக்குப் போகப் போறேன்னு சொல்றேன்.''

''இப்ப மட்டும் என்ன வேற ஒருத்தர் காலிலேயா நிக்கற?'' என்று ஜோக்கடித்து அதற்குத் தானே அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

''இத்தனைநாள் அப்படித்தான் இருந்தேன். ஆனால் நம்பினவங்க மோசம் பண்றது தெரிஞ்சதும் தான் இந்த முடிவு.''

''என்ன பூடகமாகவே பேசறே?'' என்றவனைத் தீர்க்கமாய் நோக்கினாள்.

''நீங்களும், உங்கம்மாவும் அன்னிக்குப் பேசினதைக் கேட்டேன்.''

பட்டென்று வந்த அவள் பதிலில் வேணுவின் முகம் கறுத்தது.

''அது... வந்து ஏதோ ஒரு மூடுலே அம்மா சொன்னதுக்குத் தலையாட்டினேன். ஆனால்...''

''ஏதோ ஒரு மூடு இல்லைங்க. புது மாப்பிள்ளை ஆகப் போற குஷி மூடுலேன்னு சொல்லுங்க.''

''என்ன சாந்தி இப்படிப் பேசற? அப்படி இருந்திருந்தால் இப்போ தேடி வந்திருப்பேனா?''

''முரளியைப் பார்த்தீங்களா?'' என்று நிதானமான குரலில் சாந்தி கேட்கவும் தன் குட்டு முழுவதும் உடைந்து போன நிலையில் தலை குனிந்தான்.

**மு**ரளி, வேணுவின் பக்கத்து வீட்டுக்காரன். நேற்றைக்கு முன்தினம் அவள் டாக்டரிடம் சென்று தான் கர்ப்பமாகியிருப்பதை உறுதி செய்து கொண்டாள். அந்த கிளினிக்கில்தான் முரளி கம்பவுண்டராய் இருக்கிறான். முரளி மூலமாய் வேணுவுக்கு விஷயம் தெரிந்திருக்கிறது என்பது அவன் மௌனத்திலிருந்து தெரிந்தது.

''சரி சாந்தி. மன்னிச்சுடு. நடந்ததை மறந்துட்டு வா போகலாம்.''

''எங்கே வரச் சொல்றீங்க?''

''நம்ம வீட்டுக்குத்தான்.''

''உங்க வீட்டுக்குன்னு சொல்லுங்க.''

''சாந்தி!''

''ஆமாங்க! கணவன், மனைவி உறவுக்குள்ள நெருக்கமே பரஸ்பர நம்பிக்கையும், அன்பும்தான். எப்ப அந்த நம்பிக்கை பொய்த்துப் போச்சோ இனிமேல் அங்கே என்ன வேலை!''

''நான்தான் மன்னிப்புக் கேட்டுட்டேனில்லை.... இப்ப நீ என்னோட கிளம்பறியா இல்லையா?''

''எப்படிங்க முடியும்? நான் சொல்ற கோணத்துல யோசிச்சுப் பாருங்க. உங்க செய்கை மூலமா என் மனசுல ஏற்பட்டிருக்கிற கசப்புணர்ச்சி நான் அங்கே வந்து வாழறது மூலமா இன்னும் அதிகமாகும். அதனால...''

''அதனால?''

''என் மனசுல உள்ள இந்தப் புண் ஆறுகிற வரைக்கும் என்னால அங்கே வர முடியாது. அது ஆற இரண்டு நாளும் ஆகலாம். ரெண்டு வருஷமும் ஆகலாம். முடிஞ்சா காத்திருங்க'' என்று அழுத்தந் திருத்தமாகச் சொல்லிவிட்டு பாங்க் எக்ஸாம் புத்தகத்தில் ஆழ்ந்தாள்.

குனிந்த தலையுடன் வெளியேறினான் வேணு.



''பலக்கரமாத் தொண்டை கட்டியிருக்கு டாக்டர்.''

''எத்தக் கட்டினா இருந்தாலும் ஆப்ரேஷன் பண்ணி எடுத்துடலாம், கவலைப்படாதீங்க!''

— ஸ்ரீகாழி. வி. ரேவதி.



# வயலும் வாழ்வும் அப்புசாமியும்

**பாக்கியம் ராமசாமி**

**ப**க்குவம் செய்யப்பட்டு, மணக்க, மணக்க, ஜொலிக்க ஜொலிக்கக் காய்கறிகள் டைனிங் டேபிளில் காட்சி அளித்தாலும், அப்புசாமியின் தட்டில் விழுந்தது வெறும் சாதமும், ஹெச் டூ ஓவும் மோரும் 10:1 விகிதத்தில் கலந்த திரவமும்தான்.

வெங்காயத் துவட்டல் கலந்த வெண்டைக்காய்ப் பொறியலின் மறுபெயர் அவரது உயிர் அல்லவா?

நீண்ட பிஞ்சுப் பச்சைக் கத்தரிக்காயின் மசாலா வதக்கலுக்கு அவர் கொத்தடிமை அன்றோ?

ஊட்டி பீன்ஸே, உன் பருப்பு உசிலி என்றால் அவர் வாணலியோடு விழுங்கும் வெறியர் என்பது தெரிந்ததுதானே?

அவியல்! எத்தனை பெரிய குவியலாயினும் இருக்குமிடம் தெரியாமல் செய்யக் கூடிய அவருக்கு, அவியல் ஸ்ரீ, அவியல் பூஷண் பட்டம் பெறத் தகுதி உண்டு என்பதை விரு(ந்)துக் கமிட்டி ஆராய்வதை அறியாதார் யார்?

ஆனால் — சீதாப்பாட்டியோ?

அப்புசாமிக்குக் காய்கறி தினுசுகளில் எதையும் பரிமாறாமல் வெறும் மோர்ச் சாதத்தை மட்டும் போட்டதுடன், அவர் கண்ணெதிரேயே மேற்படி காய்கறித் தட்டுக்களிலிருந்து ஓரொரு ஸ்பூன் எடுத்துத் தான் மட்டும் ருசித்து மகிழ்ந்து, 'ஓ! வொண்டர்புல்! ஃபண்டாஸ்டிக்! எக்ஸலண்ட்! ஃபேபுலஸ்!' என்று ரசித்து விட்டு, ''ராமக்கா! இதையெல்லாம் வீட்டுக்குக் கொண்டு போயிடு! நானும் அவரும் சாப்பிட்டு முடித்தாயிற்று!'' என்று வேலைக்காரிக்குக் குரல் கொடுத்தாள்.

காத்திருந்தவள் போல் வேலைக்காரி ராமக்கா தனது வீட்டு ஆறடுக்கு அலுமினியக் காரியருடன் வந்து, கண்மூடித் திறக்கும் நேரத்தில் 'கபால்' என்று அத்தனை காய்கறித் தினுசுகளையும் பாக் செய்து கொண்டு போய் விட்டாள்.



''அடியே சீதே! உனக்கும் உன் வேலைக்காரிக்கும் சாதாரண வயிற்று வலி இல்லேடி, ஐ.எஸ்.ஐ. பிராண்ட் வயிற்று வலியாகத் தாண்டி வரும்'' என்று சாபமிட்டார் அப்புசாமி.

ஒளியைத் தொடரும் ஒலி போல, அவரது சாபத்தைத் தொடர்ந்து சபதமும் வெளிப்படுவதே வழக்கம். ''பத்து நாளாக வெறும் மோரும் சோறும் போடற நீ பத்தினியாடி? நாளைக் காலைக்குள்ளே உன் தலையிலே கொண்டு வந்து ஒரு கூடைக் கறிகாயைக் கொட்டலையானால் உன் கையாலேயே மொட்டை அடிச்சு, செம்புள்ளி கரும்புள்ளி குத்திக்கறேண்டி...'' சாப்பாட்டுத் தட்டை (சாப்பிட்டு முடித்த பின்தான்) வீசி எறிந்தார்.

சீதாப்பாட்டி அருவருப்புடன் முகத்தைச் சுளித்தவாறு, ''ஓ ஷட் அப் டச் யுவர் நாஸ்ட்டி ஹெட்! இன்னும் இருபத்தேழு நாள் எப்படித்தான் கறிகாய் இல்லாமல் சாப்பிடப் போறீங்களோ!'' என்றவள் கார்க் கதவைப் பட்டென்று அடிச்சுச் சாத்திக் கொண்டு பா. மு. கழகத்துக்குப் புறப்பட்டு விட்டாள்.

சீதாப்பாட்டிக்கு இரண்டு மாதங்களுக்கு முன் திடீரென்று முழங்காலில் பெருத்த வலி. நாற்பதுகளைத் தாண்டியதுமே நாரீமணிகளுக்கு வரும் மூட்டுவலி. சீதாப்பாட்டி தினமும் வாக்கிங், ஏரோபிக்ஸ் அது இது என்று உடம்பைச் சீராகக் கவனித்துக் கொண்டதன் விளைவாக அறுபதில்தான் அவளைத் தொட்டது. டாக்டர் கண்டிப்பாகப் படி ஏறக் கூடாது என்று எச்சரித்திருந்ததால் பாட்டி படி ஏறாப் பத்தினியாகவே இருக்க நேரிட்டது.

அப்புசாமிக்குத் தடாலென்று ஓர் ஐடியா பளிச்சாயிற்று. காய்கறி விலை அநியாயத்





"என் கணவருக்குக் காது கொஞ்சம் மந்தம்!"

"அதனால...?"

"விசிலுக்குப் பதில் சங்கு பொருத்தின குக்கர் கிடைக்குமா?"

— வேதபுரி எஸ். இரமேஷ்.

---

துக்கு இப்படி விற்கிறதே' என்று சீதாப்பாட்டி அங்கலாய்த்த ஒரு தினம் தன் யோசனையை அப்புசாமி தாக்கல் செய்தார்.

"சீதே! நம்ம விட்டு மொட்டை மாடியிலே ஒரு விவசாயப் பண்ணையே பயிரிடலாம். மூன்றே மாசத்திலே விதவிதமான காய்! உழைக்க நான் தயார்" என்றார்.

கணவன் கூட இவ்வளவு பொறுப்பாகப் பேசுகிறாரே என்று அவரது திட்டத்தை மனப்பூர்வமாகவும் மணிபர்ஸ்பூர்வமாகவும் ஆமோதித்தாள் பாட்டி.

ஒரு நல்ல நாளில் அப்புசாமி சீதாப்பாட்டியிடம் ஐம்பது தொட்டிகளுக்கும் மண், எரு ஆகியவற்றுக்கும் ஆயிரம் ரூபாய் அட்வான்ஸ் பெற்று ஊழலைத் தொடங்கினார். "மாடிக்கு மண் தொட்டியெல்லாம் நான், பீமா, ரசம் விடியற்காலமே கொண்டு வைத்தாயிற்றே" என்றார், மறுநாள் மூச்சிரைக்க. ஆனால் ஒரு மூச்சுக் கூட தொட்டிக்காக இறைக்கவில்லை. தொட்டியோ மண்ணோ எருவோ வாங்கியிருந்தாலல்லவா?

இல்லாத பந்தைக் கற்பனை செய்து கொண்டு நாட்டிய மணிகள் ஆடிக் காட்டுவார்களே, அது போல அப்புசாமி, தாம் வளர்க்காத செடிகளை வளர்ப்பது போலச் சாமர்த்தியமாகப் பாவலா செய்து வந்தார். மனைவியால்தான் மாடி ஏற முடியாதே செக்கப் செய்ய!

முகத்தைக் கவலை தோய வைத்துக் கொண்டு, "சீதே, நாளைக்குக் கத்திரிச் செடிக்கு பிளோனா பிக்ஸ் அடிக்க வேண்டும். வெண்டைச் செடியிலே இலைப் புழு. மிளகாய் பாரத்தியான் ஒரு மில்லி, ரெண்டு லிட்டர் தண்ணியோடு கலந்து அடிக்கணும். அதுக்கெல்லாம் பணத்தை நீ தாராளமாக் கொடுத்திடு" என்று பணம் செதுக்கிக் கொள்வார். "ராத்திரி பூராத் தூங்கவேயில்லை. தூங்க்ரோ வைரஸ் பிடிச்சிட்டுது மிளகாய்க்கு. பாஸ்டாமிடானுக்கு ஒரு ஐம்பது ரூபா தள்ளு இப்படி..." என்று தான் டீ. வி. யில் கேட்ட பூச்சி மருந்து பெயர்களையெல்லாம் ருமப்பி அடித்து கெட்டிக்காரத்தனமாக ஏழே முக்கால் நாள் புளுகி விட்டார்.

எட்டாவது தினம் சீதாப்பாட்டி அடுத்த தெருவிலிருந்த ஒரு கிழவியின் வீட்டுக் கிரகப்பிரவேசத்துக்குப் போக நேர்ந்தது. ஐந்தாவது மாடியிலிருந்தது அந்த ஃப்ளாட். கீழேயிருந்து லிஃப்ட்டில் போய் வீட்டைச் சுற்றிப் பார்த்த சீதாப்பாட்டி, ஜிலுஜிலுவென்று வந்த காற்றைப் புகழ்ந்தவாறு ஜன்னலருகே வந்தவள் திகைத்துப் போய் விட்டாள்.

அந்த உயரத்திலிருந்து பார்த்தால் சீதாப்பாட்டியின் வீட்டு மொட்டை மாடி ஸ்ரீராமின் காமெராவில் எடுத்த காட்சி போல் பளிரெனத் தெரிந்தது. ஏதோ கும்பல் கள்ளச் சாராயம் காய்ச்சுவது போல் அடுப்பு மூட்டி என்னவோ சந்தேகாஸ்பதமாகத் தயாரித்துக் கொண்டிருந்தது. உற்றுக் கவனித்ததில் அந்தக் கும்பல் அப்புசாமி, ரசகுண்டு, பீமாராவ் என்று தெரிந்தது. மருந்துக்கு ஒரு தொட்டியையோ செடியையோ காணோம். தகரம் சூழ்ந்த திரிஸ்டவ் அடுப்பை வைத்துக் கொண்டு இஷ்டத்துக்குத் தோசை, சுண்டல், பஜ்ஜி, டீ, காப்பி என்று தயாரித்து வெளுத்துக் கட்டிக் கொண்டிருந்தனர்.

எருப் பொட்டலம் என்று மாடிக்குப் போனதெல்லாம், கடலை மாவு, அரிசி மாவு, மிளகாய்ப் பொடிகள்தானா?

'பூச்சி மருந்து டப்பா' என்ற புனைபெயரில் சமையல் எண்ணெய்தான் கதை எழுதியிருக்கிறதா?

அன்று இரவு அப்புசாமி கொத்தவரைச் செடிக்கு மீகோயாட்ரான் — 37 நடுராத்திரியே தெளித்தாக வேண்டும் என்ற கோரிக்கையை வைத்ததும், சீதாப்பாட்டி வில்லனது ரப்பர் முகமூடியைக் கதாநாயகன் கிளைமாக்ஸில் உரிப்பது போல் உரித்து விட்டதோடு, ஒரு மாசத்துக்கு அவருக்கு ஒரு துளிக் காய் கூடப் பரிமாறப்பட மாட்டாது என்று கூறி விட்டாள். அவர் கண்ணெதிரில் விதவிதமாகக் கறிகாய்கள் செய்து, தான் துளிச் சாப்பிட்டு விட்டு வேலைக்காரிக்கு அப்படியே அள்ளித் தந்து விடுவாள். இதன் விளைவாகத்தான் அப்புசாமியும், 'அடே அப்பு! புறப்படு! காலைக்குள் எங்கேயாவது எப்படியாவது ஒரு கூடைக் காய்கறியைக் கொண்டு வந்து உன் மனைவியின் தலையில் கொட்டு' என்று மனசுக்குள் கொட்டினார்.

**கா**லையில் எழுந்தால் காரமடையான் நோன்பு.

சீதாப்பாட்டி அன்றிரவு தூங்குமுன் நினைத்துக் கொண்டாள். "புவர்மேன்! நாளைக்கு மட்டுமாவது அவருக்குக் கொஞ்சம் காய்கறிகளைக் கண்ணில் காட்ட வேண்டும். புருஷனுடைய உயிரை யமனிடமிருந்து மீட்டு வந்த 'தி கிரேட் சாவித்திரி டே' ஆயிற்றே நாளை.

விடியற்காலை. எழுந்து வாசலில் கோலம் போட்டுச் செம்மண் இட்டுக் கொண்டிருந்த போது சீதாப்பாட்டியின் அருகே கரடு முரடான ஒரு குள்ளப் பேர்

வழி எதுவோ கேட்பதற்காகத் தயங்குவது போல வந்து நின்றான். இருள் முற்றிலும் விலகாத நேரம். சில பால் மாடுகள் ரிமோட் கண்ட்ரோலில் இயங்குவது போலக் குறிப்பிட்ட வாடிக்கை வீடுகளைக் குறி வைத்துத் தாமே நடந்து கொண்டிருந்தன.

சீதாப்பாட்டி தன்னருகே வந்து நின்ற உருவத்தைப் பார்த்ததும் அருவருப்பும் பயமும் அடைந்தவளானாள். தலையைப் பார்த்தால் சலூனுக்கு வழி கேட்பவனாகவும், காலைப் பார்த்தால் ஓட்டப் பந்தய மைதானத்துக்கு ரூட் கேட்பவனாகவும் தெரிந்தது.

''யாருப்பா நீ?'' என்று சீதாப்பாட்டி அதட்டி முடிக்குமுன், பாட்டியின் மண்டையில் கராத்தே அடி ஒன்று மடேரென்று போட்டான். மாமூலாகக் கையால் செங்கல் உடைக்கிறவன் போலும்.

பாட்டி தலை கிர்ரிட்டு கீழே மல்லாக்க விழுந்து, சமாளித்து எழுந்து 'தீஃப் தீஃப் திருடன்! திருடன்!' என்று கத்தி, விடிகாலை வாக் பேர்வழிகள் சிலரும், பால்காரர்களும், வேலைக்காரிகள் சிலரும் ஸ்தலத்துக்கு விரையுமுன், பாட்டியின் கழுத்திலிருந்த சங்கிலியை அப்படியே விள்ளாமல் விரியாமல் கழற்றிக் கொண்டு ஓட்டமெடுத்தான் குள்ளப் பேர்வழி.

சீதாப்பாட்டி எழுந்து கொண்டு சில அடிகள் அவனை நோக்கி ஓடியவளாக, ''காட்ச் ஹிம்! திருடன்! திருடன்!'' என்றாள்.

தெய்வாதீனமாக அந்தச் சமயத்தில் டியூட்டி முடிந்து ஒரு போலீஸ்காரர் சைக்கிளில் வந்து கொண்டிருந்தார். ''பதறாதீங்க! பாட்டியம்மா!'' இந்த ரூட்லேதான் ஓடறான். பேர் எதுனாச்சும் சொன்னானா?'' என்று விசாரித்தார்.

''ப்ளீஸ்! மடத்தனமாக ஏதாவது கேட்டுக் கொண்டு டைமை வேஸ்ட் பண்ணாதீர்கள். கோ அண்ட் கேச் ஹிம்... சைக்கிளில் வேகமாகப் போனால் நீங்கள் பிடித்து விடலாம்...'' என்று கூறியவள் தெரு மேலும் கூடி விசாரிக்குமுன் வீட்டுக்குள் போய் விட்டாள்.

அம்பாள் படத்துக்கு முன்னே அவசரமாகப் போய் நின்றாள் சீதாப்பாட்டி. வெறும் சங்கிலி போயிருந்தால் கூடப் பதறியிருக்க மாட்டாள். இப்படி வியர்த்துக் கொட்டியிராது.

தாலி கோத்த சங்கிலி!

அவசர அவசரமாக மஞ்சள் கிழங்கை ஒரு நூல் சரட்டில் கட்டிக் கழுத்தில் போட்டுக் கொண்டு பட்டியல் பட்டியலாகப் பெண் தெய்வங்களை ஞாபகப்படுத்தி வேண்டிக் கொண்டாள். நினைவிலிருந்த சுலோகங்களைச் சொன்னாள். பா. மு. கழகத்தில் கட்டாயம் ஒரு சுலோக வகுப்பு ஆரம்பிக்க வேண்டும் என்று அத்தனை பதட்டத்திலும் ஒரு நினைப்பு.

சீதாப்பாட்டி விமன்லிப் போன்ற மகளிர் விடுதலைக்கான இயக்கங்களின் தீவிரவாதி என்றாலும், தாலி மேலே ஒருத்தன் கை வைத்துக் கழற்றிப் போய் விட்டானென்றால் மிகவும் அமங்கலமாகத் தோன்றியது.

சீதாப்பாட்டி இடிந்து உட்கார்ந்திருந்த அதே சமயம் கோடம்பாக்கம் நெடுஞ்சாலையில் அப்புசாமி ஒரு கூடைக்காரக் கிழவனிடம் நைச்சியமாகப் பேசியவாறிருந்தார்.

அந்தக் காய்கறிக்காரக் கூடைக்காரனின் பெயர் உத்தண்டி. அப்புசாமியின் வீட்டுக்கு வாடிக்கையாகக் காய் கொண்டு வந்து தருபவன்தான்.

தலையில் சுமக்க முடியாத பளுவாகக் காய்கறிக் கூடையுடன் வந்து கொண்டிருந்தான் உத்தண்டி.

அப்புசாமி அவனை அந்த அரை இருட்டிலும் அடையாளம் கண்டு கொண்டு — ''உத்தண்டியா அது?'' என்று குரல் கொடுத்தார். அவனுக்கும் அவரைத் தெரிந்து விட்டது. ''என்ன சாரு, இந் நேரத்திலே இம்மாந் தூரம்?''

அப்புசாமி, ''ஹிஹி! ஒரு டீ சாப்பிட்டுப் போகலாம்னுதான். நீ சாப்பிட்டியோ டீ? கூடையைக் கீழே இறக்கி வெச்சிட்டு ஜோரா ஒரு டீ அடியேன், சப்ளை நம்முது,'' என்றார். ''இங்கே சந்துலே ஒரு டீ கடை இருக்குது பாரு — மாதவன் நாயர் டீக் கடைன்னு, ஒரு ஸிங்கிள் அடிச்சாலும் சாயந்தரம் வரை கிக் இருக்கும். அதுக்காகத் தான் காலையிலே இம்மாந் தூரம் நடந்து வந்தேன். நீ, கூடையை வெச்சிக்கிட்டு இங்கேயே குந்தியிரு. நான் போய் இரண்டு கப் வாங்கியாந்துடறேன்,'' என்று அவனை ஏகமாக உபசரித்து அவன் தலைக் கூடையைக் கீழே இறக்கி வைத்து விட்டுச் சில நிமிடங்களில் இரண்டு கப் டீயுடன் வந்தார்.

உத்தண்டி சாப்பிட்டதும் மலர்வதற்குப் பதில் மயக்கமானான். அப்புசாமி அவன் டீயில் போட்ட மயக்க மருந்து நன்றாகவே வேலை செய்தது.

வாசல் கதவு மல்லாக்காகத் திறந்து கிடப்பது கூடத் தெரியாமல் சீதாப்பாட்டி இன்னமும் கண்ணை மூடிக் கொண்டு வாய் வலிக்க சுலோகத்தைச் சொல்லிக் கொண்டிருந்தாள். ''ப்ளீஸ்! ஓ! அல்மைட்டி! ஹாவ் மெர்ஸி ஆன் மி. என் கணவருக்கு எந்த ஆபத்தும் வரக் கூடாது. நான் கட்டுக் கழுத்தியாகவே கடைசி வரைக்கும் இருக்கணும்... நான் கற்புடையவள் என்பது சத்தியமானால் என் தாலிச் சங்கிலி இன்றைக்குள் கிடைத்து விட வேண்டும்.

கண்மூடிப் பிரார்த்தித்துக் கொண்டிருந்த அவள் தலை மேல் தேவர்கள் காய்மாரி பொழிந்தனர். வெண்டைக்காய், கத்திரிக்காய், வாழைக்காய், சேனைக்காய், உருளை, சேம்பு, கொத்தவரை, அவரை, பீன்ஸ், பட்டாணி... சுருக்கமாக — குட்டிக் கொத்தவால் சாவடியையே அவள் தலையில் அப்பு

''உங்க ஸ்கூல் வாசல்ல ஆம்புலன்ஸ் எப்பொழுதும் நிறுத்திவிருக்கே! ஏன்?''
''ஃபீஸ், டொனேஷன் தொகை எவ்வளவுங்கிறதைச் சொன்னவுடனே சில பெற்றோர்கள் மயக்கமாகி விழுந்திடறாங்க. அவங்களை உடனே ஹாஸ்பிடல்ல சேர்க்கத்தான்.''

— என். வி. ரமணி.

சாமி ஆத்திரம் தீரக் கொட்டிக்கொண்டிருந்தார். "ஒரு துண்டுக் காய் கண்ணில் காட்டமாட்டேன்னியே! இந்தாடி ஒரு கூடைக் காய்!" கொட்டி முடித்தார். சீதாப்பாட்டியின் கழுத்தில் நெளுநெளுவென்று எதுவோ வந்து விழுந்தது.

அவளது திருமாங்கல்யச் சங்கிலி!

விடிகாலை திருடன் கழற்றிச் சென்ற அதே திருமாங்கல்யச் சங்கிலி!

மேனி சிலிர்த்து, "மை காட்! ஓ! சாவித்திரி! சாவித்திரி யு ஹாவ் ஸேவ்ட் மீ!"

தாலியைக் கண்ணில் பலமுறை ஒற்றிக் கொண்டவள், கணவனிடம், "ஐ கான்ட் பிலீவ் திஸ்! ப்ரேயர் கேன் மூவ் மௌன்ட்டன்ஸ்னு சொல்லுவாங்க... ப்ளீஸ்... எப்படி உங்களுக்கு இது கிடைச்சது?"

அப்புசாமி உறுமினார். "அந்த விவரமெல்லாம் உனக்கெதுக்கு? ஒரு கூடைக் காயைக் கொண்டு வந்து கொட்டறேன்னு சபதம் போட்டேன். கொட்டினேனா இல்லியா? மரியாதையாகக் காலில் விழு!"

அதே சமயம் வாசலில், காய்க்கார உத்தண்டியின் குரல் லபோ திபோ என்று கேட்டது. "ஐயோ அம்மா... இந்த அக்குறும்பு உண்டுங்களா? 'டேய் உத்தண்டி ரெண்டு பேரும் டீ சாப்பிடலாம்டா'ன்னு என்னை வழிமறிச்சு, மயக்க டீயை வாங்கிக் குடுத்து என் கூடையை அபேஸ் பண்ணிட்டு வந்துட்டாரே... உங்க வூட்டுக்காரர். அடுக்குமுங்களா அநியாயம். பெரிய மனுஷங்க பண்ற காரியமாம்மா இது?"

சீதாப்பாட்டி நிலைமையைப் புரிந்து கொண்டாள். "உத்தண்டி! ஏம்ப்பா பதர்றே? அவர் ஒண்ணும் உன்னை மோசம் பண்ணலை. அவரும் மயக்கமாத்தான் உள்ளே விழுந்து கிடக்கிறார். நீ கிழவன் அங்கேயே மயங்கிட்டே. இவர் உன்னை விட ஸ்டிராங். அத்தனை மயக்கத்திலும் உன் காய்கறிக் கூடையைக் காப்பாற்றணும்னு இங்கே தூக்கிட்டு வந்து தடால்னு போட்டுக் கொண்டு விழுந்தார். உன் கூடைக் காய் பத்திரமா இருக்கு. அத்தனையையும் நானே இன்றைக்கு வாங்கிக் கொள்கிறேன். இந்தா இதில் முன்னூறு ரூபா இருக்கு! போய்ச் சேர்" உத்தண்டி கும்பிடு போட்டுக் காலிக் கூடையை வாங்கிக் கொண்டு போய்ச் சேர்ந்தான்.

ஒளிந்து கொண்டிருந்த அப்புசாமிக்குப் பெண்சாதி ஏன் தன்னைப் பெருந்தன்மையாகக் காப்பாற்றினாள் என்பது புரியாத புதிராயிருந்தது.

சீதாப்பாட்டிக்கோ அதை விட ஒரு விஷயம் பெரும் புதிராயிருந்தது. காய்கறிக் கூடையில் எப்படி அவள் தாலி இருந்தது?

நெடு நேரம் யோசித்து யோசித்து அவள் கடைசியில் உண்மையை ஊகித்து விட்டாள்.

தாலிச் சங்கிலியைத் திருடிக் கொண்டு ஓடியவனை சைக்கிள் போலீஸ்காரர் துரத்திச் சென்றிருக்கிறார். தப்பித்தால் போதும் என்று திருடன் சங்கிலியை விசிறி எறிந்துவிட்டு எப்படியோ தப்பி விட்டான்.

அவன் எறிந்த சங்கிலி, விடிகாலையில் சரக்கு பிடிக்கக் கோடம்பாக்கத்துக்கு வெற்றுக் கூடையைத் தலையில் வைத்தவாறு போய்க் கொண்டிருந்த உத்தண்டியின் கூடையில் விழுந்திருக்கிறது.

உத்தண்டி கூடையில் சங்கிலி விழுந்திருப்பது தெரியாமல் காய்களை வாங்கிப் போட்டுக் கொண்டு சுமந்து வரும் வழியில் தான் அப்புசாமி அவனுக்கு மயக்க டீ கொடுத்து...

தனக்கு மூன்று முறை திரும்பத் திரும்பக் கீழே விழுந்து நமஸ்காரம் செய்த சீதாப்பாட்டியின் செய்கை அப்புசாமிக்கு அதிசயமாக இருந்தது.

"உங்கள்கிட்டே ஒரு ரகசியம் சொல்லணும்... இப்படிக்கிட்டே வாங்களேன்" என்றாள் சீதாப்பாட்டி.

"என்ன, நாளைக்கும் எனக்கு மோருஞ் சோறா?" என்றார் அப்புசாமி.

சீதாப்பாட்டி ரகசியக் குரலில், "ஊஹூம்... நீங்கள் என் தெய்வம்!" என்றாள்.

அப்புசாமி பத்தாயிரம் வோல்ட் ஜெனரேட்டர் கரெண்ட் தாக்கியதைப் போல் அதிர்ச்சியுற்று மயங்கி விழுந்தார்.

# வெற்றிக் கரங்கள்

பழிவாங்கும் துடிப்பு நிறைந்த இளைஞராகப் பிரபு. காதலிலும் கைகலப்பிலும் அவரிடம் தெரிவது அநாயாசம். குள்ளநரிப் போலீஸ் அதிகாரி வினு சக்கரவர்த்தி ஒரு இக்கட்டான சந்தர்ப்பத்தில் இவரிடம் நமுட்டுச் சிரிப்போடு கூறுவது: ''அப்பாவைப் போலவே நல்லா நடிக்கிறீங்களே!'' — வசனத்துக்குப் பொருந்துவது அந்தச் சந்தர்ப்பம் மட்டும் அல்ல. பிரபுவும்தான்.

ஓ. ஓ. ராதாரவி! சத்தமேயில்லாத குரூரச் சிரிப்பு. அது தோன்றிய அடுத்த நொடியிலேயே சாயலான பார்வை:, யுடன் முகம் சீரியஸாக மாறுவது இதில் இவர் ஸ்பெஷாலிடி. அடிக்கடி வலது தோளை மட்டும் உயர்த்திச் சுழட்டுகிறார். ஓரிரு முறையென்றால் அது மானரிஸம். அடிக்கடிச் செய்தால் அது என்ன இஸம்?

கதாநாயகி ரூபிணி வக்கீலாம். உரையாடலில் தெரிவது இது. சும்மா சொல்லக் கூடாது. நன்றாகவே நாட்டியமாடுகிறார். அதற்கு மேல் வேலை இல்லை.

பிரபுவின் தோழராகப் பிரேம். சிறு வயதில் ஓர் அனாதையாகிப் பெற்ற துயர அனுபவங்களின் காரணமாக அனாதை ஆசிரமம் ஒன்று நடத்தி, அதில் வளரும் குழந்தைகளிடம் அன்பைப் பொழிவது சரி. அந்த ஆசிரமத்தை நடத்துவதற்குப் பணம் சேர்க்கக் கொள்ளையடிக்கிறாராமே, அது எதில் சேர்த்தி?



நாலே பாட்டுக்கள்தான். என்றாலும் நறுக்கென்று இசையமைத்திருப்பவர் இளையராஜா.

பில்லாவும் பாபுவும் படத்தின் வெற்றிக்குப் பெரும் துணை. பொழுதுபோக்கு அம்சங்களை எந்த அளவில் எந்தெந்த வகைகளில் சேர்க்க வேண்டும் என்பது முன்னவருக்குக் கைவந்த கலையாயிருப்பது இதில் மீண்டும் தெளிவு. காமிராவைக் கையாளுவதில் பின்னவருக்கு மெருகேறிய அனுபவம்.

அப்புறம் என்ன? கதையென்ற பெயரில் மெல்லிய நாலிழையொன்று கிடைத்தால் போதாதா? — பேட்ரியட் ஏவுகணைத் தாக்குதல்தான்!

— சி. ஆர். கே.



அலுவலக அறையில் உட்கார்ந்து கொண்டு, சுழலும் நாற்காலியில் திரும்பி ஆகாயத்தைப் பார்த்தவாறு சிந்தனையி லாழ்ந்திருந்தாள் மஞ்சுளா.

அவ்வறை, 'ஏர்—கண்டிஷனரி'ன் மிகச் சன்னமான ஒலியைத்தவிர,மற்றபடி அமைதி யாக இருந்தது. வெளியே, உலகம் ஸ்தம் பித்து, கால ஓட்டம் நின்று விட்டாற்போல் மஞ்சுளாவுக்குத் தோன்றிற்று.

துருவ்வின் பைத்தியக்காரத்தனத்தை அவள் தொடர்ந்து சீராட்டிக் கொண்டி ருக்க வேண்டியது அவசியந்தானா? பாவம், அந்தப் பெண் கோமளா.

இப்பொழுதும் ஒன்றும் குடி முழுகிப் போய்விடவில்லை. இந்தக் கல்யாணத்தை ரத்து செய்து அவளே பணம் செலவழித்து, அந்தப் பெண் கோமளாவுக்கு அவளுக்குத் தகுந்தாற் போல் ஓரிடத்தில் கல்யாணம் செய்து விடலாம்.

ஆனால் யார் முன் வருவான்?

நிறையப் பணம் செலவழித்தால்? கல்யா ணத்துக்குப் பிறகு பணத்தை வாங்கிக் கொண்டு அவன் கைவிட்டுப் போகமாட்டா னென்பது என்ன நிச்சயம்? அப்படியென் றால்...?

டெலிபோன் ஒலித்தது.

இதற்காகத்தான் அவள் காத்துக் கொண்டிருந்தாள். யாரையும் ஒரு மணி நேரத்துக்கு உள்ளே அனுப்ப வேண்டா மென்று சொல்லியிருந்தாள்.

டெலிபோன் ஜெனிவாவிலிருந்து. சன் னானா.

"எஸ்... மஞ்சுளா..."

"எல்லாம் நல்லபடியாக முடிந்துவிட்டது. உங்கள் பிரதிநிதி மிஸ்டர் நிக்கல்ஸன் எல்லா உதவிகளும் செய்தார். கங்கிராட்ஸ். நீங்கள் இப்பொழுது ஒரு புதிய ஏஜென்ஸி யின் அதிபர். ஆனால் நீங்கள்தான் அதிபர் என்று யாருக்கும் தெரியப் போவதில்லை. கவலை வேண்டாம்."

"நான் என்ன செய்ய வேண்டுமென்கி றீர்கள்?"

"ஒன்றும் செய்ய வேண்டாம். அதுவே பெரிய உதவி. நிக்கல்ஸன் அசகாய சூரர்."

"உங்களை விடவா?"

அதை ஆமோதிப்பது போல் அட்டகாச மான சிரிப்பு.

பத்மநாபன் இவனைக் கொல்ல வேண்டுமென்று சொன்னது சரிதான்.

"இன்னொரு விஷயம். நீங்கள் பத்ம நாபனை உடனே பம்பாய்க்குப் போகச் சொல்லி, ரிஸர்வ் வங்கியில் உயர்தர அதி காரியாக இருக்கும் தாப்பருடன் தொடர்பு கொள்ளச் சொல்லுங்கள். அடுத்த ஃப்ளைட்டில் அவர் ஜெனிவா வர வேண் டும்."

"பத்மநாபனால் உடனே புறப்பட்டு வர முடியுமா என்று எனக்குத் தெரியாது."

"இது அவருடைய முடிவல்ல. நீங்கள் முடிவு செய்து அனுப்பியாக வேண்டும். அவர் பாரிசுக்குப் போகும்படியாக இருக் கும்."

"பாரிசுக்கா? அப்படியென்றால்...?"

"'அப்படியென்றால்' அப்படித்தான். பத்மநாபன் ஒரு 'லோ ப்ரொஃபைல் பர் ஸன்', நமக்குப் பாதுகாப்பான ஆள். அவ ரிடம் பாஸ்போர்ட் இருந்தால் அதைக் கொடுத்துவிட்டு, டிப்ளமாடிக் பாஸ்போர்ட் வாங்கிக் கொள்ளச் சொல்லுங்கள். அதற் கான ஏற்பாடு செய்தாகி விட்டது. விஸா வுக்கும் ஏற்பாடாகியிருக்கிறது. இப்பொ ழுதே அவருக்கு போன் செய்யுங்கள்."

"எல்லாம் ஆணைகளாகவே இருக்கின் றனவே?"

"ஆணையில்லை, மேடம். அன்புக் கட் டளை" என்று கூறிவிட்டுச் சிரித்தான் சன் னானா.

"இத்தனையும் செய்தால் இதைப் பொறுத்தவரையில் எனக்கு என்ன அர்த் தம்?"

"ஜெனிவாவில் உங்கள் வங்கியை விசா ரித்துத் தெரிந்து கொள்ளுங்கள். இது கிடக் கட்டும்; உங்கள் மகன் எப்படியிருக் கிறான்? கல்யாணத்துக்குப் பிறகு ஏதாவது மாறுதல் உண்டா?"

"நன்றி... மிஸ்டர் சன்னானா... நான் பத்மநாபனிடம் உடனே தொடர்பு கொள் ளுகிறேன்" என்றாள் மஞ்சுளா.

"ஜெனிவாவில் உங்கள் மகனுடைய

13

# ஆகாசத் தாமரை



கச்சேரிக்கு என்னால் ஏற்பாடு செய்ய முடியும். நம்முடைய 'ஃபாரின் எக்ஸ்சேஞ்ச்' பணத்தைக் கணக்குக் காட்ட ஒரு சரியான ஏற்பாடாகக் கூட இருக்கும். போன வாரம் ஜூபின் மேத்தா வந்திருந்தாராம். ஹால் பொங்கி வழிந்ததென்றார்கள்.''

''சரி, போனை வைத்து விடவா? பத்மநாபன் கல்கத்தா போவதாகச் சொன்னார். அதற்குள் அவரைப் பிடித்தாக வேண்டும்.''

''உங்கள் சாமர்த்தியத்தை மெச்சுகிறேன். நான் வற்புறுத்தி உங்களை எதுவும் கேட்க விரும்பவில்லை... தாங்க்யூ மேடம்.''

**ப**த்மநாபன் மஞ்சுளா பேசி முடிக்கும் வரை ஒன்றுமே கூறவில்லை. கண்களை மூடியவாறு கேட்டுக் கொண்டிருந்தார்.

மஞ்சுளா சொல்ல வேண்டியனவற்றைச் சொல்லிவிட்டுச் சில விநாடிகள் பேசாமலிருந்தாள்.

''ஹும்'' என்று பெருமூச்சு விட்டார் பத்மநாபன்.

''உங்களாலே போக முடியாதுன்னு நான் எவ்வளவோ சொல்லிப் பார்த்தேன். கேட்க மாட்டேங்கிறான்.''

''பேய்க்கு வாழ்க்கைப் பட்டாச்சு,'' என்றார் பத்மநாபன்.

''யாரு பேய், நானா, சன்னானாவா?''

''சன்னானாவைச் சொல்றேன். இன்ஃபாக்ட், ரெண்டு மாசம் 'லீவு' எடுத்துண்டு ஆழ்வார்கள் மங்களாசாஸனம் பண்ணியிருக்கிற திவ்யதேசங்களையெல்லாம் தரிசனம் பண்ணிட்டு வரலாம்னு நினைச்சேன். இப்போ பாரிசுக்கும் ஜெனிவாவுக்கும் போக வேண்டியிருக்கு.''

''ஐ ஆம் ஸாரி, மிஸ்டர் பத்மநாபன்.''

''பரவாயில்லே... நீங்க என்ன செய்ய முடியும்? சன்னானாவைக் 'காண்டாக்ட்' பண்ணறதுக்கு முன்னாலே என்னை ஒரு வார்த்தை கேட்டிருக்கலாம்.''

''என்னோட தப்புதான்...''

''தப்பு என்கிறதுக்காகச் சொல்லலே. இப்போ நாம செய்யப் போற காரியத்துக்குப் பின் விளைவுகள் இல்லாமலிருந்தால் சரி.''

''அப்படித்தான் நாம வேண்டிக்கணும்.''

''அங்க வருஷத்துக்கொரு தடவை ஜனங்ககிட்டே கையேந்திண்டு போற கூட்டம். ஆபத்துன்னா அவா மாட்டிக்க மாட்டா. நம்ம தலைதான் உருளும். சன்னானா தப்பிச்சுண்டுடுவான். சன்னானா மாதிரி ஆட்களுக்கு ஒரு 'ஸ்ட்ராங் சர்வைவல் இன்ஸ்டிங்க்ட்' உண்டு.''

இந்திரா பார்த்தசாரதி



''முதல் மாதச் சம்பளக் கவரை அம்மாகிட்டே கொடுக்கிறதா, இல்லை, மனைவிகிட்டே கொடுக்கிறதான்னு யோசிச்சுக்கிட்டே இருந்தேன்!''

''கடைசியில் யார்கிட்டே கொடுத்தே?''

''பஸ்ல எவன்கிட்டேயோ கொடுத்துட்டேன்!''

— ஞா. ஞானமுத்து.

''நான் உங்களை எதுவும் வற்புறுத்தலே. உங்களுக்கு இஷ்டமில்லாட்டா...

''நோ... நோ... நான் போகத்தான் போறேன். ஆனா நாம ரொம்ப ஜாக்கிரதையா இருக்கணும். இது ஒரு சர்க்கஸ் வித்தைதான். இப்போ இந்தியாவிலே வியாபாரம் பண்ணணும்னா, சர்க்கஸ் வித்தையெல்லாம் நன்னாத் தெரிஞ்சிருக்கணும். பாரிஸுக்குப் போயிட்டு வந்தே க்ஷேத்ராடனம் போறேன். சுமற்றி எறிய பாவ மூட்டை பெரிசாகவே இருக்கும்.''

''அது உங்களுடைய மூட்டை இல்லே... எனக்காகச் சுமக்கிற மூட்டை...

''அப்படிச் சொல்லாதீங்கோ... நீங்க என்ன செய்வேள்...? நம்ம சமூக அமைப்பு அப்படியிருக்கு. நீங்களும் என் மாதிரி இந்தப் பொறியிலே அகப்பட்டுண்ட எலிதான்...'' என்று கூறிவிட்டுச் சிரித்தார் பத்மநாபன்.

பத்மநாபன் போன பிறகு மஞ்சுளா அவர் சொன்னதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தாள்.

துருவ் ஒதுங்கி விட்டான். இந்த விதத்தில் அவன் அதிர்ஷ்டசாலி. ஆனால் அவன் சுதந்திரமாக இருப்பதற்கு அவளுடைய சுதந்திரத்தை விலையாகத் தர வேண்டியிருக்கிறது.

துருவ் அனுபவிப்பதாக நினைத்துக் கொண்டிருப்பது சுதந்திரந்தானா? மந்தையிலிருந்து தப்பித்துப் போன ஆட்டுக்குச் சுதந்திரத்தைப் பற்றிய பிரக்ஞை எங்கே இருக்கப் போகிறது?

உலகில் எல்லாருமே அவன் சுதந்திரத்தை அவனுக்கே உணர்த்துவதற்காகப் படைக்கப்பட்ட ஜென்மங்கள் என்று துருவ் நினைக்கிறான்.

பாவம் அந்தப் பெண்! இரண்டு நாட்களுக்கு முன்பு அவள் அழுது கொண்டு ஜன்னல் கம்பிகளைப் பிடித்தவாறு நிற்பதை மஞ்சுளா பார்த்தாள்.

''ஏம்மா அழறே?''

கோமளா கண்களைத் துடைத்துக் கொண்டாள்.

''சொல்லு, ஏன் அழறே?''

''அவர்... அவர்...''

''சொல்லு...''

துருவ் அவளை அடித்திருப்பானென்று மஞ்சுளாவுக்குத் தோன்றவில்லை.

''நான் 'வீணை கத்துத் தாங்க'ன்னு அவரைக் கேட்டேன்... அவர் பதிலே சொல்லலே...''

''இதுக்காகவா அழறே?''

''இல்லே, கொஞ்ச நேரம் கழிச்சு என்னைப் பார்த்துப் பெரிசாச் சிரிச்சுண்டேயிருந்தார்.''

மஞ்சுளாவுக்குப் புரிந்தது.

''நீ அழாதே... உனக்கு நான் ஒரு வீணை வாத்தியாரை ஏற்பாடு பண்றேன்.''

''அது வேணாம்.''

''ஏன்?''

''அவர் தப்பா நினைச்சுப்பார்.''

''அவனும் சொல்லித் தரமாட்டான், வாத்தியார் ஏற்பாடு பண்ணினா அவன் ஏன் தப்பா நெனைச்சுக்கணும்?''

''எனக்குப் பாட்டு வராதுன்னு அவர் அபிப்பிராயம்.''

''நீ ஏன் அப்படி நினைக்கிறே?''

''எனக்கே தெரியும்...''

''என்ன தெரியும்?''

''எனக்குப் பாட்டு வராது... அவரோட பேசணுங்கிறதுக்காகக் கேட்டேன்; 'எனக்கு வீணை கத்துத் தாங்கோ'ன்னு...''

அந்தப் பெண்ணைப் பார்த்தால் அவளுக்குப் பரிதாபமாக இருந்தது...

இண்டர்காம் ஒலித்தது. மஞ்சுளா ரிஸீவரை எடுத்தாள்.

''உங்களைப் பார்க்கத் தர்னேஜா வந்திருக்கிறார்.''

இவன் எதற்காக வந்திருக்கிறான், முன்னறிவிப்பு இல்லாமல்? தில்லியிலுள்ள தரகர்களில் பெரும்புள்ளி.

''வரச் சொல்.''

தர்னேஜாவுக்கு ஐம்பது வயதிருக்கும். மிகவும் நாசூக்காகப் பேசத் தெரிந்தவன். நிறுத்தி, நிதானமாக, குரலை மிகவும் இணக்கமாக வைத்துக் கொண்டு பேசுவான். பார்க்கிறவர்களை வசீகரிக்கும் ஒரு புன்னகை.

''மன்னிக்கவும், மேடம். முன்னறிவிப்பில்லாமல் வந்திருக்கிறேன்.''

''பரவாயில்லை. உட்காருங்கள். மிகவும் அவசரமான காரியமாகத்தானிருக்க வேண்டும். என்ன குடிக்கிறீர்கள், காப்பி, டீ?''

''ஒன்றும் வேண்டாம். மெஹ்ரலி பக்கத்தில் ஒரு இரசாயனத் தொழிற்சாலை உருவாகப் போகிறது. தெரியுமா உங்களுக்கு?''

''கேள்விப்பட்டேன், 'ப்ளூ சிப்ஸ்.'''

''வேண்டுமா உங்களுக்கு?''

''எனக்கா...?''

''ஆமாம், உங்களுக்குத்தான். காதும் காதும் வைத்தாற்போல் 15% வாங்கிவிடலாம்.''



# உப்பு சத்தியாக்கிரகத்துக்கும் இந்த டிராக்டருக்கும் என்ன ஒற்றுமை?

"நிறைய இருக்கிறது" என்கிறார் திரு வி. கமலநாதன். 'பயிர்த் தொழில் நாட்டின் உயிர்த்தொழில்' என்பதில் அவருக்குத் தீவிர நம்பிக்கை. புதிய புதிய உத்திகளைக் கையாள வேண்டும், நவீன கருவிகளையெல்லாம் பயன்படுத்தி விளைச்சலைப் பெருக்க வேண்டும் என்பதில் பேரார்வம்.

இந்த ஒற்றுமையைப் பற்றி அவர் கூறுவது:

"உப்பு சத்தியாக்கிரகம் நடந்தது வேதாரண்யத்தில், என்னுடைய டிராக்டர் ஓடுவது வேதாரண்யத்துக்கு அருகில் உள்ள ஆயக்காரன்புரத்தில். நாட்டு விடுதலைக்கான நடவடிக்கைகளில் ஓர் அங்கம் உப்பு சத்தியாக்கிரகம். நாட்டின் உணவுத் தேவைகளைப் பூர்த்தி செய்யும் நடவடிக்கைகளில் ஓர் அங்கம் இந்த டிராக்டர். அந்தப் போராட்டத்தில் நூற்றுக்கணக்கானோர் பங்கேற்றனர். இந்த டிராக்டர் வாங்க உதவிய நிறுவனத்தில் ஆயிரக்கணக்கானோர் உறுப்பினர்."

இப்படிக் கூறும் திரு கமலநாதன், டிராக்டர் வாங்க வேண்டும் என்று முடிவு செய்தபோது சற்று யோசிக்கத்தான் செய்தார். கையிருப்பை முடக்கிவிடாமல் அதே நேரத்தில் நம் பணத்தைக் கொண்டே முதலீடு செய்வது எப்படி? — அப்போதுதான் அந்த விளம்பரம் கண்ணில் பட்டது.

அதைப் பார்த்ததும் அவருக்குத் தோன்றிய எண்ணம்:

ஆயிரக்கணக்கானவர்கள் பலனடையும் அந்த மக்கள் இயக்கத்தில் தானும் ஒருவராக ஏன் இடம்பெறக் கூடாது? முடிவெடுத்தார். பலனடைந்தார். இப்போது அவர் நிலத்தில் இந்த டிராக்டர் ஓடிக்கொண்டிருக்கிறது.

திரு கமலநாதன் கூறுகிறார்:

"ஸ்ரீராம் சிட்ஸின் உதவியினால் என்னால் டிராக்டர் வாங்க முடிந்தது என்று சொல்லிக் கொள்ளும்போது எனக்குப் பெருமையாக இருக்கிறது. அந்த நிறுவனத்தினால் அடையக்கூடிய எண்ணற்ற பலன்களை இப்போது தெரிந்து கொண்டுவிட்டேன். விவசாயத் தொழிலை மேலும் பெருக்குவதற்கு இன்னும் பல சீட்டு வரிசைகளில் சேரவேண்டும் என்று முடிவு செய்திருக்கிறேன்...

உங்கள் முடிவு எப்படி?

''அதெப்படி முடியும்? அது ஒரு குடும்ப விவகாரமென்று கேள்விப்பட்டேன். அரசாங்கத்துக்குச் செல்லப் பிள்ளை...''

''குடும்பமென்றால் அதில் 'கறுப்பு ஆடு' இருக்கக் கூடாதா?''

''ஐ ஸீ...''

ஏற்கெனவே ஒரு 'பினாமி'யினால் பிரச்னை. இன்னொன்று தேவையா? — மஞ்சுளா யோசித்தாள். ''இரண்டு நாள் அவகாசம் கொடுங்கள்.''

''இரண்டு நிமிஷங்கள் தருகிறேன்.''

''என் மீது உங்களுக்கு ஏன் இவ்வளவு அக்கறை?''

''நான் ஒரு அம்புதான்.''

''எய்தவர் யார்?''

''அக்குடும்ப நபர்தான். நீங்கள் பல தடவை இந்த நிறுவனத்துக்குள் நுழைய முயன்று தோற்றீர்கள் என்பது அவருக்குத் தெரியும். இப்பொழுது அவருக்கும் அவருடைய சகோதரர்களுக்குமிடையே பேச்சு வார்த்தை இல்லை. ஏனென்றால்...'' என்று கூறிச் சற்று நிறுத்திவிட்டுப் பிறகு சொன்னான்: ''அவர் வேறு மதத்தினள் ஒருத்தியைத் திருமணம் செய்து கொண்டது அக்குடும்பத்தினருக்குப் பிடிக்கவில்லை...''

''குடும்பச் சண்டையில் நான் ஆதாயம் தேட விரும்பவில்லை.''

''காதல், போர் — ஆகிய இரண்டிலும் எல்லாமே நியாயந்தான் என்று கூறுவார்கள். இப்பொழுது மூன்றாவதாக வியாபாரத்தையும் சேர்த்துக் கொள்ளுங்கள், நீங்கள் சொன்ன மாதிரி அது 'ப்ளூ சிப்ஸ்' உங்களுக்குத் தேவையில்லை என்றால்...''

''நான் அப்படிச் சொல்லவில்லை.''

''இது வியாபாரம்'' என்று 'இது'வில் அழுத்தம் கொடுத்துவிட்டுத் தொடர்ந்தான். ''சொல்லுங்கள், வாங்கட்டுமா?''

''சரி...''

''இன்னொரு விஷயம்...''

''என்ன...?''

''அந்த இடத்தை — அதாவது தொழிற்சாலை நிறுவப் போகிற அந்த இடத்தை 'ரியல் எஸ்டேட் ஏஜென்ட்ஸ்' மூலம் அநேகமாக வாங்கியாகி விட்டது. ஆனால், ஒரு தீவு மாதிரி ஒரு சின்ன 'ப்ளாட்' இருக்கிறது. அதை வாங்க முடியவில்லை. ரியல் எஸ்டேட் ஏஜென்ஸி காரர்கள் எத்தனை பணம் வேணுமானாலும் தரத் தயார் என்கிறார்கள். ஆனால் அந்த இடத்துக்கு உரிமையாளர் அதை விற்க மறுக்கிறார். அந்த இடம் கிடைத்தால் சாலை போடுவதற்கு வசதியாக இருக்கும்.''

''அரசாங்கத்தின் செல்லப் பிள்ளைக்குக் கூடவா இதைச் சாதிக்க முடியவில்லை?''

''கோர்ட்டுக்குப் போவான். ஸ்டே ஆர்டர் வாங்குவான். இதுதான் தொந்தரவு.''

''என்ன செய்யப் போகிறீர்கள்?''

''உங்கள் உதவி தேவை.''

''என் உதவியா? நான் என்ன செய்ய முடியும்?''

''அந்த உரிமையாளர் பெயர் சால்லா. பட்டாளத்துக்காரர். தெரியுமா?''

''தெரியாது.''

''உங்களுக்கு மூர்த்தியைத் தெரியுமா? இன்னொரு பட்டாளத்துக்காரர்...''

''அவரைவிட அவர் மகளை நன்றாகத் தெரியும்.''

''குட். நீங்கள் மூர்த்தியிடம் பேசி, சால்லாவை அந்த இடத்தை விற்று விடும்படி சொல்ல வேண்டும். இருவரும் நல்ல நண்பர்கள்.''

''அவ்வளவு தூரம் எனக்கு மூர்த்தியிடம் செல்வாக்கு இருக்கிறதா தெரியாது...'' இன்னொரு விஷயம். மூர்த்தியின் மகளை என் மகன் விரும்புவதாகச் சொன்னான். ஆனால், கல்யாணம் செய்து கொள்ளவில்லை. மூர்த்திக்கு அசாத்தியக் கோபம். இச்சூழ்நிலையில் என் குறுக்கீடு உங்களுக்குப் பாதகமாகவே முடியக் கூடும்.

''மூர்த்தியின் மகளுக்கும் இதனால் மிகவும் கோபமா?''

''நாட் அட்டால். அவள் ஒரு தங்கமான பெண். என் மகனுக்குத்தான் அவளை மணக்கக் கொடுத்து வைக்கவில்லை. அவள் இதைப் பற்றிக் கவலைப்படவுமில்லை. வேண்டுமென்றால், அந்தப் பெண் சந்தியா மூலம் சால்லாவை அணுகலாம்.''

''குட்... எப்படியாவது இந்த 'டீல்' முடிந்தாக வேண்டும்.''

''முயன்று பார்க்கிறேன்'' என்றாள் மஞ்சுளா.

''இன்னும் இரண்டு நாட்களில் உங்களுக்கு அந்த 'ப்ளூ சிப்ஸ்' கிடைத்துவிடும்'' என்றார் தர்னேஜா.

(தொடரும்)

---

''வருகிற தமிழ் வருடம் குடும்பநலத் திட்டத்திற்கு எதிரியான வருடம்!''

''எப்படி?''

''வருடத்தின் பெயரே பிரஜோத்பத்தி ஆயிற்றே!''

— பி. கே. மூர்த்தி.



''இந்த தரம் நீங்க தேர்தலுக்கு நிக்கலியாமே?''

''இந்த பிசினசே இனிமே வாணாங்க. திமர் திமர்னு கலைச்சுடறாங்க. போட்ட முதலையே எடுக்க முடியலே...!''



அடுத்த வாரம்

# கல்கி

தமிழகத்தின் மிகச்
சிறந்த கார்ட்டுனிஸ்டுகளும்
நகைச்சுவை எழுத்தாளர்களும் சிரிப்பு
நடிகர்களும் இணைந்து அளிக்கும்:



## சிரிப்புச் சிறப்பிதழ்

இலவச இணைப்பு:

## சுஜாதா வின்

முழுநீள நாடகம் **சரளா**

## சுகிசிவம் எழுதும்

ஆன்மீகக் கதைகள்:

## நல்லவெண்ணம் வாழலாம்

# அனுராதா ரமணன் எழுதும் மர்மத் தொடர்:




- இந்தத் தொடரைக் கவனமாகப் படித்து வரும் வாசகர்களுக்கு ஓர் எளிய போட்டி.

- எளிய போட்டிக்கு முதல் பரிசோ மிகப் பெரியது!

# ஃபிரிஜ் பரிசு!

- ஆறுதல் பரிசுகளும் உண்டு!






# சந்திர மண்டலத்தை எட்டிய சூயிங் கம்!

'பள்ளி மற்றும் கல்லூரி மாணவ மாணவியர் எந்நேரமும் சூயிங்கம் மெல்வதைப் பார்க்கிறோம். இப்பொருள் எந்தக் கலவையினால் ஆனது? இதனை அளவிற்கு அதிகமாகச் சாப்பிடுவதால் உடல் ஆரோக்கியம் பாதிக்கப்படாதா?'... இந்தச் சந்தேகங்களை எழுப்பி, 'சம்பந்தப்பட்டவர்களைப் பேட்டி கண்டு எழுதுங்களேன்' என்று யோசனை தெரிவித்திருந்தார் ஸ்ரீமுஷ்ணம் வாசகர் சா. கிருஷ்ணசாமி. அவர் யோசனையை ஏற்று கம் இந்தியா (பிக் ஃபன் பபிள் கம் தயாரிப்பாளர்கள்) நிறுவனத்து விற்பனை மேலாளர்களைச் சந்தித்துப் பேசினோம்:

"தென் அமெரிக்காவில் விளைவது Sapodilla என்ற மரம். ரப்பர் மரத்தில் பால் கிடைப்பது போல் 'Chicle' (சிக்லி) என்ற திரவம் இம் மரத்திலிருந்து கிடைக்கும். "மாயா" என்ற ஆதிவாசிகள் அதை எந்நேரமும் சுவைத்துக் கொண்டிருப்பதையும், பல் துலக்கும் சாதனங்களைப் பயன்படுத்தாமலேயே அவர்களுடைய பற்கள் பளிரென வெண்மையாக இருப்பதையும் கவனித்த 'தாமஸ் ஆடம்' என்பவர் சிக்லியில் சுவைக்காக இனிப்பைச் சேர்த்து விற்பனைக்குக் கொண்டு வந்தார். இதுவே சூயிங்கம் பிறந்த கதை. இன்றும் கூட 'சிக்லெட்' சூயிங்கம் பாக்கெட்டுகள் மேல் அவர் பெயர் இருப்பதைக் காணலாம்.

"நாளடைவில் அமெரிக்காவில் போதிய அளவு மூலப் பொருள் கிடைக்காததால், உணவுத் தரமுள்ள, பக்க விளைவுகளற்ற, செயற்கை ரப்பர் பிசினைக் கொண்டு சூயிங்கம் உற்பத்தி செய்ய ஆரம்பித்தனர். போதையூட்டும் பொருள் எதையும் இதில் நிச்சயம் சேர்ப்பதில்லை...

"மெல்லும் போது இதைத் தவறுதலாக விழுங்கி விட்டால் கூட மறுநாள் தானே வெளிவந்து விடும்" என்றனர் கம் இந்தியா நிறுவனத்தினர்.

"அப்படியானால் சூயிங்கம்மினால் எந்த

• உமாசங்கர்



• பத்மநாபன்





பிள்ளையின் தந்தை: வாஷிங் மிஷின், குக்கர், கிரைண்டர், மிக்ஸி இதெல்லாம் வாங்கி வெச்சுடுங்க!

பெண்ணின் தந்தை: 'மாமியார் என் கூடத்தானே இருக்கப் போறாங்க; எதுக்கு இதெல்லாம்'னு என் மகள் கேக்கறா!

— சீர்காழி. வி. ரேவதி.

விதத்திலும் கெடுதல் கிடையாது என்று நீங்கள் தீர்மானமாகச் சொல்கிறீர்களா?'' எனக் கேட்டோம்.

''நிச்சயமாகக் கிடையாது. குழந்தைகள் நாள் முழுவதும் பல வகை மிட்டாய்கள் சாப்பிடுவதை விட்டு, சூயிங்கம் ஒன்றையே சாப்பிடுவதால் இனிப்பு அதிகம் சாப்பிடுவது தவிர்க்கப்படுகிறது. எந் நேரமும் மென்று கொண்டே இருப்பதால் பற்களின் இடுக்குகளில் ஏற்கெனவே படிந்திருந்த உணவுத் தூள்களும், சூயிங்கத்தில் இருந்த சர்க்கரையும் கூட அரைக்கப்பட்டு பற்களில் தங்காமல் உள்ளே சென்று விடுவதால் பற்கள் சுத்தமாகி விடுகின்றன!

''அமெரிக்கா போன்ற வெளிநாடுகளில் ஆராய்ச்சிகள் செய்து இதன் நன்மைகளைச் சொல்லியிருக்கிறார்கள். சூயிங் கம் மெல்லும் போது தாடைப் பகுதி அசைவதால் கழுத்துச் சதை வளராமல் கழுத்து அழகாக இருக்கும். ஜப்பான் நாட்டில் இரவு வேளையில் வாகனங்களை ஓட்டும் டிரைவர்கள் காப்பி, டீக்குப் பதிலாகச் சூயிங்கம் மென்றால் தூக்கம் வராமல் விழிப்புடன் இருக்கலாம் என்கிறார்கள். அமெரிக்கப் போர் வீரர்களுக்குப் புத்துணர்ச்சியும், ஈடுபாடும் ஏற்பட சூயிங்கம் சாப்பிடும்படி சொல்லப்படுகிறது. சூயிங்கம் அமெரிக்க விண்வெளி வீரர்களுடன் சந்திர மண்டலம் வரையில் கூடப் போய் வந்திருக்கிறது! மேல் நாடுகளில் நம் ஊர் 'கிரைப் வாட்டர்' போல வயிற்றுப் பொறுமல், வேதனைக்கு, குழந்தைகளுக்கு 'Medical Gum' டாக்டர்களால் பரிந்துரை செய்து எழுதித் தரப்படுகிறது!''

**சூயிங் கம் மெல்லும் பழக்கமுள்ள சிலரைச் சந்தித்துப் பேசினோம்:**

**எஸ். உமா சங்கர்:** பத்து வருடங்களாக எனக்கு இந்தப் பழக்கம் உண்டு. முதலில் சூயிங்கம் சாப்பிடுவதை ஒரு 'ஸ்டைல்' ஆகக் கருதித்தான் ஆரம்பித்தேன். பின்னர் தொடர்ந்து சாப்பிடுவதன் மூலம் என்னால் கோபம், பொறுமையின்மை இவற்றைக் கட்டுப்படுத்த முடிந்தது. சூயிங்கம்மை அழுத்தி மெல்வதன் மூலம் என் கோபத்தை அதன் மேல் காண்பிப்பது போல ஒரு உணர்வு ஏற்படும். மேலும் மனத்தை ஒருநிலைப்படுத்துவது சாத்யமானது போலவும் தோன்றியது. சூயிங்கம் சாப்பிடுவதால் இதுவரை எனக்கு எந்தத் தொந்தரவும் வந்ததில்லை.

**ஏ. பத்மநாபன்:** இடைவிடாமல் வெற்றிலை புகையிலை போடும் பழக்கம் எனக்கு இருந்தது. விளையாட்டாய் ஒரு நண்பன் சொன்னதன் பேரில் சூயிங்கம் மெல்ல ஆரம்பித்தேன். வெற்றிலை போடுவது கணிசமாகக் குறைந்தது. ஏதோ ஒரு வகைப் புத்துணர்ச்சி ஏற்படுவது போல் இருந்தது. தாகம் ஏற்படாமல் இருந்தது. விழிப்புணர்ச்சியுடன் கூடிய சுறுசுறுப்புடன் உடலும் மனமும் இருந்தன. சிகரெட், குடிப் பழக்கம், வெற்றிலை போன்ற கெட்ட பழக்கங்களைக் குறைக்க சூயிங்கம் உதவுவதாக நினைக்கிறேன். வெற்றிலை போடுவது குறைந்து விட்டதால் இப்போது சூயிங்கம் மெல்வதையும் நிறுத்தி விட்டேன். இதிலிருந்து யாரும் சூயிங்கம்முக்கு அடிமையாகி விடுவதில்லை என்பது தெரிகிறது.

**பி. தேவானந்த்:** எனக்கு நான்கைந்து வருடங்களாக இந்தப் பழக்கம். பள்ளியில்



• டாக்டர் பாஸ்கர் ராஜ்



• தேவ் ஆனந்த்



• டாக்டர் அஹமத்

என்னை விட சீனியர் மாணவர்கள் கிரிக்கெட் விளையாடும் பொழுது ஆட்டத்திலிருந்து கவனம் சிதறாமல் இருப்பதற்குச் சூயிங்கம் சாப்பிடுவதாகக் கேள்விப்பட்டதும், நானும் கிரிக்கெட் ஆடும் போது சாப்பிடப் பழகிக் கொண்டேன். சாப்பிடும் நேரம் தவிர மீதி நேரமெல்லாம் சூயிங்கம் மென்றேன். இதனால் ஆட்டத்தில் புதுப்புது யுக்திகள் கிடைக்கும். படிக்கும் போது நன்றாக மனத்தில் பதியும். தாகம் எடுக்காமல் இருக்கும். சோம்பேறித்தனமாக அலுப்பாக இல்லாமலும் புத்துணர்ச்சியுடன் இருப்பது போல இருக்கும். ஆனால் பெற்றோர்கள் இந்தப் பழக்கத்தை எதிர்த்தே வந்தனர். மேலும்.என் தந்தை ஒரு மருத்துவர். அலோபதி, சித்த வைத்திய நிபுணர். அவர் கொஞ்சம் கொஞ்சமாக அதன் தீய விளைவுகளை விவரித்து என் மனத்தை மாற்றியதில் தற்போது வெகுவாகக் குறைத்து விட்டேன். முழுவதும் நிறுத்தி விடத் தீர்மானமும் செய்துள்ளேன்.

**மருத்துவர்கள் சூயிங்கம் விரும்பத் தக்கதன்று என்றே கூறினார்கள்.**

**தேவ் ஆனந்தின் தந்தை டாக்டர் டி.ஆர். பாஸ்கர் ராஜு:**

வாயில் இயற்கையாகவே உமிழ்நீர் சுரப்பதால் உடலுக்குப் பல நன்மைகள். ஆனால் எந்நேரமும் சூயிங் கம் மெல்வதால் உமிழ்நீர் சுரப்பிகள் அளவுக்கதிகமாகத் தூண்டப்பட்டு உமிழ்நீரை உற்பத்தி செய்கின்றன. இவ்வாறு உற்பத்தி செய்யப்படும் உமிழ்நீர் வயிற்றினுள் சென்று அமிலத்தைத் தூண்டும். கல்லீரல் பாதிக்கப்படும். மேலும் சூயிங் கம் மெல்வதால் பல்லுக்கும், ஈறுகளுக்கும் இடையே உற்பத்தியாகும் 'பயோரியா' கிருமிகளும் உட்செல்கின்றன. இதனால் தொண்டை அகழ்ச்சி, தொண்டைப் புண் உண்டாகும். இரைப்பையில் இனிப்பும், களிம்பும் போவதால் ஒரு வகை புற்றுநோய் ஏற்படக் கூட வாய்ப்புண்டு. தொடர்ந்து தாடை அசைவதால் தலையில் உள்ள நரம்புகளுக்குத் தளர்ச்சி ஏற்படும். பற்களுடைய பளபளப்பும் குறைந்து இளமஞ்சள் நிறமாக மாறி விடும்.

**பல் டாக்டர் காப்டன் எம். டி. அஹமத்:**

சூயிங் கம் மெல்வது தவறான பழக்கம். பல் சொத்தைக்கு வித்திடும்! பற்களில் மேடு பள்ளங்களும் இடுக்குகளும் உள்ளன. இவற்றுள் இனிப்பு போய்த் தங்கினால் அதன் மேல் பாக்டீரியா தோன்றி அதன் விளைவால் ஆஸிட் உற்பத்தியாகிறது. அதனால் இளம் வயதிலேயே பல் சொத்தை ஆகி விழும் ஆபத்தைத் தவிர்க்க முடியாது!

— நிருபர்.

# ஈராக் உள்நாட்டுக் கலவரம் அமெரிக்காவின் தூண்டுதலா?



* ஹீரோவா, ஜீரோவா?

o ஈ. டி. விஜயகுமார், ஈரோடு.

**? நாடாளுமன்றத் தேர்தலில் யாருக்கு வோட்டுப் போடுவது நல்லது?**

! அப்படியென்றால் சட்டமன்றத் தேர்தலில் யாருக்கு வோட்டு என்று தீர்மானித்து விட்டீர்கள் என்று அர்த்தமா!

o ப. விஜயபாலன், சென்னை — 41.

**? ஈராக்கில் நடக்கும் உள்நாட்டுக் கலவரம் அமெரிக்காவின் தூண்டுதல்தானே?**

! ஸத்தாம் இந்தக் கலவரத்தின் விளைவாகப் பதவி இழந்தால் அமெரிக்கா மகிழும் என்பது வேறு விஷயம். ஆனால் கலவரமே அமெரிக்காவின் தூண்டுதலால்தான் நடக்கிறது என்று கருத முடியாது. ஸத்தாமின் சர்வாதிகாரப் போக்குக்கு எதிராக அங்கே ஏற்கெனவே இயக்கங்கள் இருந்து வந்திருக்கின்றன. இஸ்லாமிய மதத்தின் உட்பிரிவினரிடையே பகைமை வேறு. எல்லாவற்றையும் அடக்கி ஆண்டு வந்தார் ஸத்தாம். ஆனால் இப்போது யுத்தத்தில் அவர் அடைந்த தோல்வி அவருக்கு எதிரான எழுச்சிக்கு உதவியுள்ளது. வெற்றி பெறும் வரைதான் ஒருவன் ஹீரோ; தோல்வியைத் தழுவினால் ஜீரோதான்!

o டி. சீனிவாசன், சென்னை.

**? 'தேர்தலின் போது இடைக்கால அரசு தனது அதிகாரங்களைத் தவறாகப் பயன்படுத்தாதிருக்க ஜனாதிபதி பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று எதிர்க் கட்சிகள் கோரியுள்ளனவே?**

! சந்திரசேகர் அரசை வேணுமானால் இடைக்கால அரசு என்று சொல்லி ஜனாதிபதி கண்காணிக்கலாம். பிரதமரும் கண்ணியமாக நடந்து கொள்ளலாம். ஆனால் மாநில அரசுகளை என்ன செய்வது? தேர்தல் நடக்கும் போது தாமே ஆட்சியில் இருக்க வேண்டும்; தமது டம்மியைக் கூட அனுமதிக்கக் கூடாது என்று ஹுக்கும் சிங்குக்குக் கல்தா கொடுத்த சௌதாலாவை ஆர். வி. என்ன செய்யப் போகிறார்? (இதன் பின்னர் சௌதாலா அரசு மைனாரிடி அரசாகி விட்டது என்பது வேறு விஷயம்). குறிப்பிட்ட தேதிக்குப் பிறகு அதிகாரிகளை மாற்றக் கூடாது என்ற தேர்தல் கமிஷன் உத்தரவைக் கருதி அவசரம் அவசரமாக அந்தத் தேதிக்கு முன்னதாகவே பல அதிகாரிகளைத் தங்களுக்குச் சாதகமான இடங்களுக்கு மாற்றி விட்ட உத்தரப்பிரதேசம், பீகார், ஹரியானா மாநில அரசுகளை ஜனாதிபதி தட்டிக் கேட்கவா போகிறார்? தேர்தலை முன்னிட்டு வாக்காளருக்கு இதை விட மோசமான விதத்தில் லஞ்சம் தர முடியாது என்று சொல்லும்படி சாராயத்தின் விலைகளை அடி மட்டத்துக்குக் குறைத்திருக்கும் ராஜஸ்தான் அரசின் கேவலமான போக்கை ஆர். வி. திருத்தி விடவா முடியும்?

o கே. என். பாலகிருஷ்ணன், கும்பகோணம்.

**? வாக்காளப் பெருமக்களுக்குத் தங்கள் அறிவுரை?**

! வோட்டுரிமையை வீணடிக்காதீர்கள்!

o கே. ஆர். தேவேந்திரன், கொணவட்டம்.

**? வரும் மக்களவைத் தேர்தல் முடிவுகள் எப்படி அமைந்திட வேண்டும் என்று எதிர் பார்க்கிறீர்கள்?**

! இழுபறியாய் இருந்து விடக் கூடாது. மெஜாரிட்டி பலம் ஒரு கட்சிக்கு இருக்க வேண்டும். அது அபரிமித மெஜாரிட்டியாகவும் அமைந்து விடக் கூடாது. அந்தக் கட்சி, பொறுப்புணர்ந்து நல்லாட்சி வழங்க வேண்



* கண்காணிப்பது எப்படி?



* கர்நாடக இசையின் நண்பர்!



* உண்மை பேசினார்



* செயல்படாத செல்வாக்கு!

டும். நல்லறிஞர்களும், செயல் வீரர்களும் அமைச்சரவையில் இடம்பெற வேண்டும். நாட்டின் பிரச்னைகள் இருந்த இடம் தெரியாமல் மறைய வேண்டும். சுபிட்சம் நிலவ வேண்டும்... பகற் கனவு காண 144 தடை உத்தரவா போட்டிருக்கிறது? வண்ணத்திலேயே காணுங்கள்!

○ வே. செந்தில்குமார், கொங்கணாபுரம்.

**? 'இன்னும் இரண்டு மாதம் பிரதமராயிருந்திருந்தால் பல பிரச்னைகளைத் தீர்த்திருப்பேன்' என்கிறாரே சந்திரசேகர்?**

! ஆமாம், ஆமாம். குறிப்பாக ஸி. பி. ஐ. இணை டைரக்டர் என். கே. சிங், பிரதமர் சந்திரசேகர் மீது பல குற்றச்சாட்டுக்களை அடுக்குகிறார் அல்லவா? (உ.ம்.: சந்திராசாமி மீது ஸி. பி. ஐ. விசாரணை நடத்த முடியாமல் பிரதமர் தடை விதிப்பது; ஸெயிண்ட் கிட்ஸ் விசாரணையை வாபஸ் பெறுமாறு பிரதமரின் தூண்டுதல்; சந்திரசேகர் டெலிஃபோன் ஒட்டுக் கேட்கப்படவில்லை என்ற ஸி. பி. ஐ. அறிக்கை காரணமாகப் பிரதமருக்கு ஏற்பட்ட கோபம்) இந்தப் பிரச்னைக்கு நிச்சயம் சந்திரசேகர் ஒரு தீர்வு கண்டிருப்பார். இப்போது இடைக்காலப் பிரதமராக மட்டுமே இருப்பதால் செல்வாக்குச் செயல்படவில்லை. என். கே. சிங் மத்திய நிர்வாகிகள் முறையிட்டுக் குழு முன்பு பல குற்றச்சாட்டுக்களை அடுக்கத் துணிந்து விட்டார்!

○ ஏ. எஸ். மாரியப்பா, புதுக்கோட்டை.

**? அண்மையில் உங்களை மிகவும் பாதித்த ஒரு செய்தி எது?**

! கர்நாடக இசை உலகின் மிகச் சிறந்த அமெரிக்க நண்பர் ஒருவர் காலமாகி விட்டார் என்பதுதான். ஜேம்ஸ் ஏ. ரூபின் என்பது அவர் பெயர். ரவி சங்கருக்கு மட்டுமே அமெரிக்காவில் கொடி கட்டிப் பறந்து கொண்டிருந்த கால கட்டத்திலேயே கர்நாடக இசையின் மதிப்பையும் இனிமையையும் உணர்ந்து அதன் பரம ரசிகரான ஜேம்ஸ், பின்னர் ஒவ்வொரு இசை விழாவின் போதும் சென்னை வருவார். பல கலைஞர்களின் நிகழ்ச்சிகளை டேப் செய்து கொண்டு போய் அமெரிக்கப் பல்கலைக் கழகங்களில் பிரபலப்படுத்தினார். பல இசைக் கலைஞர்களை அமெரிக்காவுக்கு வரவழைத்துக் கச்சேரிகளுக்கு ஏற்பாடு செய்வார். கர்நாடக இசை அமெரிக்காவில் இன்று பெரும் வரவேற்பைப் பெறுகிறது என்றால் அதற்கு அடித்தளம் அமைத்தவர் ஜேம்ஸ். இதற்காக பான் ஓரியண்ட் ஆர்ட்ஸ் ஃபவுண்டேஷன் என்ற அமைப்பை ஏற்படுத்தி அதற்குத் தமது வருவாயிலிருந்து நிதி ஒதுக்கினார். மிகவும் எளிமையான மனிதர்; பழகுவதற்கு இனியவர். ஒரு கச்சேரிக் குழுவை வரவழைத்து விட்டால் அவர்களுக்காக மிருதங்கத்தைத் தோளில் தூக்கிக் கொண்டு ஓடவும் தயங்காத பண்பாளர். தமது இறுதிக் காலம் நெருங்குவதை உணர்ந்துதானோ என்னவோ சில காலம் முன்பு தமது டேப் தொகுப்புக்கள் முழுவதையும் ஹார்வர்டு பல்கலைக் கழகத்துக்கு நன்கொடையாக வழங்கி விட்டார்!

○ எழிலன், திருச்சி.

**? ஜெ.யுடன் ஜனதா தளம் (எஸ்) கூட்டு என்கிறார்களே, எப்படி? மத்தியில் காங்கிரஸை எதிர்க்கும் ஜனதா தளம் (எஸ்) தமிழ்நாட்டில் கூட்டு வைப்பது சரியா?**

! நேற்று வரை ஜனதா தளம் (எஸ்) அரசுக்கு ஆதரவு கொடுத்து வந்த கட்சி தானே, காங்கிரஸ்? மேலும் மத்தியிலேயும் காங்கிரஸ் — ஜனதா தளம் (எஸ்) கூட்டணி வந்து விடும் போலிருக்கே!

○ குரு கிருஷ்ணா, திருச்சி — 8.

**? 'மலிவு விலை மதுவால் பெண்களும் சிறுவர்களும் கூடக் குடிக்க ஆரம்பித்து விட்டார்கள்' என்று ஆளுனரின் ஆலோசகர் கார்த்திகேயன் குற்றம் சாட்டியிருக்கிறாரே?**

! தைரியமாக உண்மை பேசியதற்குக் கார்த்திகேயனைப் பாராட்ட வேண்டும். அதோடு இன்னொன்று, கள்ளச் சாராயத்தை ஒழிக்க முடியவில்லை என்ற போலீஸாரின் சமீபத்திய ஒப்புதல் வாக்குமூலத்தையும் சேர்த்துக் கொள்ள வேண்டும். ஆக மொத்தம் கருணாநிதி மலிவு விலை மதுவுக்காக மட்டுமின்றி அதற்கு அவர் கூறிய பொய்யான காரணத்துக்காகவும் கண்டனத்துக்குள்ளாகிறார்.

○ பி. கே. மூர்த்தி, மதுரை. *

**? இப்போது சதாம் உசேன் பதவி விலகினால் ஈராக் நாட்டுக்கு எவ்வளவோ நன்மையல்லவா?**

! இரட்டிப்பு நன்மை. முதலாவது, புரட்சியாளரை எதிர்ப்பதாகக் கூறிக் கொண்டு சதாம் உசேன், தமது மக்கள் மீதே விஷ வாயு மற்றும் ரசாயனக் குண்டுகள் பிரயோகித்துச் சித்திரவதை செய்வதும், தமது நாட்டு எண்ணெய்க் கிணறுகளைத் தாமே கொளுத்துவதும் நிற்கும். இரண்டாவது, நேற்று வரை எதிரிகளாக இருந்த பன்னாட்டினர் நேசப்பான்மையுடன் ஈராக்குக்கு உதவ முன்வருவார்கள்.

*** ரூ. 20 பரிசு பெறுபவர்:**

**பி. கே. மூர்த்தி,**
**1/46, நேரு நகர், மதுரை**
**— 625 018.**







— எம். ஆர். ராஜுபாஸ்கர், சென்னை — 88.






சிரிக்க வையுங்கள்;
சிங்கப்பூர் செல்லுங்கள்!

● பொதுக் கூட்டத்தில் ஒரு பேச்சாளர் மிகவும் நகைச்சுவையாகப் பேசிக் கொண்டிருந்தார். கடைசியில், "இவ்வளவு நேரம் நான் உங்களோடு பேசக் காரணம்..." என்று சற்று நிறுத்தினார். உடனே கூட்டத்திலிருந்து ஒருவர் "இன்னும் உங்களுக்குச் 'சோடா' தராததுதான்" என்றார். மேடையிலிருந்தவர்கள் உட்பட்ச்,சிரிக்க, பேச்சாளரோ, "நான் இவ்வளவு நேரம் பேசியது சோடாவுக்காக அல்ல; வீட்டில்தான் மனம் விட்டுப் பேச முடியலை; இங்கேயாவது பேசுவோமேன்னுதான்" என்று கூறி மீண்டும் சிரிப்பலைகளை எழுப்பினார்!

— டி. வெங்கட், ஆனத்தூர்.



"ஏன் சார் உங்களுக்குக் 'கொலஸ்ட்ரால்' இருக்குன்னு தேங்காய்ப் பக்கமே டாக்டர் உங்களைப் போகக் கூடாதுன்னு சொல்லிட்டாரு. சரி; அதுக்காக, டி.வி.யிலே தேங்காய் சீனிவாசன் நடிச்ச படத்தைக் கூடவா பார்க்கக் கூடாது?

— கே. ஆர். வரதராஜன், சென்னை — 41.

# ரயிலைவிட

● சமீபத்தில் நான் ஒரு வேலையாக சஞ்சம்பாக்கத்திற்குச் சென்ற போது, புதிதாகக் கட்டப்பட்டுக் கிரகப்பிரவேசத்திற்குக் காத்திருக்கும் ஒரு வீட்டின் முன்பு எழுதித் தொங்கவிடப்பட்டிருந்த அட்டை: "இந்த வீடு கட்டும் போது இதற்கு வி. பி. சிங் கட்டிட காண்டிராக்டராக இருந்தாரா...? ராஜீவ் காந்தி இஞ்சினியராகப் பணிபுரிந்தாரா...? கருணாநிதி கொத்தனாராக இருந்து கடைக்கால் போட்டாரா? ஜெயலலிதா சித்தாளாக வேலை செய்தாரா...? மூப்பனார் மேஸ்திரியாகச் செயல்பட்டாரா...? நாங்கள் மிகவும் கஷ்டப்பட்டுக் கட்டிய இந்த வீட்டு முன் சுவரில் கட்சிச் சின்னங்களோ, பிற உபேச்சைச் சின்னங்களோ வரைந்து வோட்டுக் கேட்க வேண்டாம்!"

— எஸ். சாதிக்பாஷா, சென்னை — 78.





● கிராமத்திலிருந்து சென்னைக்கு வந்திருந்த ஒருவர் வாகனங்களில் 'அவசர போலிஸ் உதவிக்கு 100' என்று எழுதப்பட்டிருந்த வாசகத்தைப் பார்த்துவிட்டுச் சலித்துக் கொண்டார்:

''இந்த அளவுக்குப் போலிஸ்காரர்கள் வெளிப்படையாகப் போர்டு போட்டு லஞ்சம் வாங்க ஆரம்பித்து விட்டார்களா? பட்டணம் ரொம்ப முன்னேறித்தான் விட்டது!'' என்று!

— மு. இராமகிருஷ்ணன்,
போடிநாயக்கனூர்.




● முன்பு திருநெல்வேலிக்கும், திருச்செந்தூருக்கும் இடையே ஓடிக் கொண்டிருந்த பாஸஞ்சர் இரயிலின் வேகம் மிகவும் பிரசித்தி. ஒரு நாள் அந்த இரயில் செல்லும் பாதையில் ஒரு எருமை மாடு படுத்திருந்ததால் வண்டி நின்றுவிட்டது. டிரைவர் கீழே இறங்கி எருமையைக் விரட்டிவிட்டு வண்டியை மறுபடி செலுத்தினார். சுமார் அரைமணி நேரம் கழித்து மீண்டும் ஒரு தடங்கல். டிரைவர் மீண்டும் கீழே இறங்கிப் பார்த்தார். முன்பு விரட்டப்பட்ட அதே எருமை, இரயில் பாதையில் மீண்டும் படுத்திருந்தது! ரயிலைவிட வேகமாக நடந்து இளைப்பாறிய அந்த எருமையைப் பாராட்டத்தானே வேண்டும்! செய்தோம்!

— ச. பைசல், முத்தூர்.

# வேகமாக எருமைமாடு!




● ஊரிலிருந்து வந்திருந்த என் ஒன்றுவிட்ட தம்பியை என் அம்மா மளிகைக் கடைக்குச் சென்று சர்க்கரை வாங்கிவரச் சொன்னார். சர்க்கரை வாங்கியது போக மீதிப் பணத்தை என் அம்மாவிடம் கொடுக்கப் பாக்கெட்டிற்குள் கையை விட்டவன் கையோடு எதிர்பாராத விதமாய் ஒரு சிகரெட்டும் வெளிவந்தது. எங்கள் எல்லோருக்கும் 'ஷாக்.' அவனோ சிறிதும் பதறாமல், ''கடைக்காரன் சில்லறை இல்லேன்னான். சரி, தாத்தாவுக்காக ஒரு சிகரெட் வாங்கி 'அட்ஜஸ்ட்' பண்ணலாம்னு வாங்கிட்டு வந்தேன்'' என்றான். அப்போது அங்கே வந்த தாத்தா, ''ரொம்ப சந்தோஷம்; ஆனா, மளிகைக் கடைல எப்போதிருந்து சிகரெட்லாம் விக்க ஆரம்பிச்சாண்டா?'' என்று கேட்க, தம்பி விழிக்க, நாங்கள் சிரித்த சிரிப்பு...!

— ஜி. டி. ராஜா, சென்னை — 28.




— வி. வித்யா, சென்னை — 92.

# மரம் நடுவதன் பலன்



பலவிதமான மரங்களை நிழல் இல்லாத இடங்களில் உண்டாக்கி வளர்த்து, வழிப்போக்கர்களுக்கு நிழலுண்டாக்கியவன் தன் வம்சத்தில் இறந்தவர்களையும், இனி பிறப்பவர்களையும் பாவிகளாக இருந்தாலும் தூய்மைப்படுத்தப் பிதுரர்களுக்குப் ப்ரீதி உண்டாக்குபவனுவான்.

ஒருவன் இறந்த பிறகு அவனது புத்திரர் அவனைச் சாந்தியடையும்படி பலவித கிரியைகளைச் செய்வதுபோல் ஒருவன் வளர்த்த மரங்களும் அவனை சாந்தியடையச் செய்விக்கும். மரங்கள் மலர்களினுல் தேவகணங்களையும் பழங்களினுல் பிதுர்த் தேவர்களையும் நிழலினுல் அதிதிகளையும் பூஜிக்கின்றன. மலர், பழம் முதலியவற்றுடன் கூடி நின்று பூவுலகத்தில் இருப்பவர்களையும் திருப்தி செய்விக்கின்றன.

கின்னரர், உரகர், இராக்ஷஸர், தேவர், கந்தருவர், ரிஷிகணங்கள் முதலிய யாவரும் விருக்ஷங்களை விரும்புகிறுர்கள். இகத்திலும் பரத்திலும் இம்மரங்கள் தம்மை வளர்த்தவனுக்குப் புத்திரர்கள் என்று சொல்லப்படுகின்றன.

நீர்த்துறைகளை உண்டாக்குபவர்களும், மரங்களை நட்டு வளர்ப்பவர்களும், யாகங்களைச் செய்த வேதியர்களும் சத்தியவான்களும் ஒரு காலத்திலும் ஸ்வர்க்க லோகத்தை விட்டு நீங்க மாட்டார்கள்.

(சிவ மஹா புராணம்)



• வைகை அணையில் மன்றத்தினர்



• மாவடியான்

# ஒவ்வொரு ஆண்டுமே சுற்றுலா ஆண்டோன்!

எங்கள் கருப்பூர் கிராமத்துக் குழந்தைகளை பெங்களூர், மைசூர், ஊட்டி போன்ற சுற்றுலாத் தலங்களுக்கு அழைத்துச் சென்றால், உங்களுக்கு ஒவ்வோர் இடத்தையும் சுற்றிக் காண்பித்து விடுவார்கள்! ஒவ்வொரு வருடமும் கருப்பூர் முத்தமிழ் நற்பணி மன்றம் ஏற்பாடு செய்யும் சுற்றுலாவில் கலந்து கொண்ட அனுபவம்தான் இந்தச் சிறுவர்களுக்குக் 'கைடுகள்' போல் வழிகாட்டி விளக்க உதவுகிறது!

சுற்றுலா அழைத்துச் செல்வதற்கென்றே முத்தமிழ் நற்பணி மன்றம் செயல்படுகிறது. தஞ்சை மாவட்ட, திருவையாறு தாலுகாவிலுள்ள கருப்பூரில், இம்மன்றம், கிராமத்திலுள்ள இதர இலக்கிய, மகளிர், சிறுவர் மன்றங்களின் ஒருங்கிணைப்பு! பிரதி மாதமும் பதினைந்தாம் தேதியன்று கூடி, மன்ற உறுப்பினர்கள் பத்து ரூபாய் சந்தா கட்டுகிறார்கள். இத்தொகை சேமிப்புக் கணக்கில் வைக்கப்பட்டு, சுற்றுலாக்களின் போது பயன்படுத்தப்படுகிறது. ஒவ்வோர் உறுப்பினரின் குடும்பத்திலிருந்தும் யாரேனும் ஒருவர் ஆண்டுதோறும் சுற்றுலாவில் கலந்து கொள்ள வாய்ப்புத் தரப்படுகிறது.

சுற்றுலா செல்பவர்கள் தங்கள் உடைகளை மட்டும் எடுத்துச் சென்றால் போதும். தங்கும் வசதி, குளிர்ப் பிரதேசமானால் கம்பளிப் போர்வை வாடகைக்கு எடுக்கும் பணி, காலை, மாலை சிற்றுண்டி தயாரித்து வழங்குதல், குடிநீர், சுற்றுலாச் செல்லும் இடங்களில் செலுத்த வேண்டிய நுழைவுக் கட்டணங்கள் போன்ற சின்னச் சின்ன விஷயங்களையெல்லாம் மன்றம் கவனித்துக் கொள்ளும். ஒவ்வொரு தேவையையும் கவனிக்கச் சிறு சிறு குழுக்கள் அமைக்கப்படுகின்றன. குடிநீர் வழங்கும் குழு, பஸ் ஓட்டுனர், உதவியாளர் — இருவரையும் கவனித்துக் கொள்ளும் குழு, தங்குமிடம் ஏற்பாடு செய்யும் குழு, சுற்றுலாத் தலங்களில் நுழைவுக் கட்டணம் போன்ற சில்லறைச் செலவுகளை நிர்வகித்துக் கணக்கு வைத்துக் கொள்ளும் குழு, மருத்துவ உதவிக் குழு, உபரிப் பணம் தேவைப்படுவோருக்கு உதவும் குழு, சிற்றுண்டித் தயாரித்து வழங்கும் குழு, எல்லோரும் ஒழுக்கமாக நடந்து கொள்கிறார்களா என்று கண்காணிக்கும் குழு... எனப் பல்வேறு குழுக்களிடையே வேலைகள் பகிர்ந்தளிக்கப்படுவதால், எல்லோருக்குமே பொறுப்புணர்வு ஏற்படுவதோடு வேலைச் சுமையின் அழுத்தமின்றிச் சுற்றுலாவை அனுபவிக்கவும் முடிகிறது.

இதுவரை தென்னிந்தியாவின் சுற்றுலாத் தலங்கள் அனைத்தையுமே அநேகமாகச் சுற்றிப் பார்த்தாகி விட்டது. ஒவ்வொரு சுற்றுலாவும் முடிவுற்ற மூன்றாம் நாள் நற்பணி மன்றம் கூடி நடந்து முடிந்த பயணத்தை விமர்சித்து, அடுத்த பயணத்துக்கான ஏற்பாடுகளை எப்படிச் செய்யலாம், குறைகளை எப்படி நிவர்த்தி செய்யலாம் என்று யோசித்து, கலந்துரையாட ஆரம்பிக்கிறது.

குன்றாத உற்சாகத்துடன் கருப்பூர் மக்கள் மேற்கொள்ளும் சுற்றுலாக்களினால் ஊர் ஒன்றுபட்டு ஒற்றுமை வளர்கிறது. ஒவ்வொரு முறையும் வெளியூர் அன்பர்கள் ஐந்து பேர் சுற்றுலாவில் சேர்த்துக் கொள்ளப்படுகிறார்கள். மது அருந்துவோருக்கு மட்டும் இந்தச் சுற்றுலாக்களில் இடமே கிடையாது!

— ஆ. மாவடியான்.




மடிசார் மாமியாக மனோரமா. கோயிலில் தரும் உள்ளங்கையளவு புளியோதரையைத் தன்னுடைய நாலு மகன்களுக்கும் பிரித்துக் கொடுத்துவிட்டு அவர் மட்டும் பட்டினி கிடந்து அவர்களை வளர்த்தவர். சிறகு முளைத்ததும் அவரை அம்போவென்று கைவிட்டு விட்டு அந்த நாலு பேரும் வெவ்வேறு திசைகளில் சென்றுவிட, கடலில் தஞ்சமடையச் செல்லும் மாமியைக் 'கபாலி' சத்யராஜ் காப்பாற்றுகிறார். இருவருக்குமே தாய் — மகன் உறவு ஒரு புதிய அத்தியாயமாக உதிக்கிறது.

இரவில் குடிகாரன். பகலில் பரோபகாரி. இவர் தான் 'கபாலி' சத்யராஜ். அடுத்தவர் நலனுக்காகவும் மற்றவர் மானம் காக்கவும் அடிதடிகளில் இறங்கி, அதன் விளைவாக அவ்வப்போது சிறைக்குச் சென்று திரும்புகிறவர். (இருபத்தைந்து முறை சிறை சென்று திரும்பிய வைபவத்தை விழாவாக வேறு கொண்டாடுகிறார்.) பானுப்ரியாவின் சந்திப்பில் அவர் வாழ்வில் ஒரு திருப்பம்...!

சினிமாவில் கோரஸ் பாடி வாழ்க்கை நடத்தும் பானுப்ரியா யாருமற்ற அனாதை. ஒருநாள் இரவு வீடு திரும்பும் போது, ஆளரவமற்ற தெருவில் வழி மறிக்கும் சில முரடர்களிடமிருந்து தன்னுடைய மானத்தைக் காப்பாற்றிக் கொள்வதற்காகத் தனக்குச் சண்டியர் கபாலியைத் தெரியும் என்று சொல்லப் போக, அதுவே 'தகாத உற'வாக உருப்பெற்று அந்தப் பேட்டை முழுதும் வதந்தியாகப் பரவிவிட, தன் சுய கௌரவத்துக்கும் கற்புக்கும் இழுக்கு நேர்ந்துவிட்டதாக சத்யராஜ் பொங்கியெழுந்து (பெண்கள் விஷயத்தில் அவ்வளவு சுத்தமானவராம்) பானுப்ரியாவைத் தேடிப் போய் அவரை ஓங்கி அறைந்துவிட —

கதை விரிக்க ஒரு வலுவான முடிச்சு விழுந்து விடுகிறது.

சுவை குன்றாமல் அமைக்கப்பட்டுள்ள சின்னச் சின்ன நிகழ்ச்சிகள். அதன் காரணமாகக் கதையோட்டத்துக்குக் கிடைப்பது எக்ஸ்பிரஸ் வேகம். கூடவே தொடர்ந்து நிழலாடும் மெலிதான நகைச்சுவை. தாளமிட வைக்கும் இசை.

அலட்டிக் கொள்ளாத நடிப்பு பானுப்ரியாவினுடையது. கண்களே அனைத்தையும் செய்து முடித்து விடுகின்றன. குறிப்பிட வேண்டிய இடம்: முதல் தனிப் பாடலுக்குச் சந்தர்ப்பம் கிடைத்ததும் வெளிப்படும் பெருமிதம் கலந்த மகிழ்ச்சிப் பெருக்கு... பல்லவி பதிவாகத் தொடங்கும்போதே பிரபல பின்னணிப் பாடகி (உபயம்: எல். ஆர். ஈஸ்வரி) ரிகார்டிங் தியேட்டரினுள் நுழைந்துவிட, மீண்டும் கோரஸ் வரிசையில் போய் நின்று கூட்டத்துடன் சேர்ந்து குரல் கொடுக்க நேர்ந்த பரிதாபம்... நயமான வெளிப்பாடுகள்.

மனோரமாவும் சத்யராஜும் இயக்குனர் மணிவண்ணனும் வலுவான தூண்களாகத் தாங்கி நிற்க, சூப்பர் பொழுது போக்கு.

— சி. ஆர். கே.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன். இணை ஆசிரியர்: சீதா ரவி.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 431543, 434157; 434190. ஆசிரியர் குழு அலுவலகம்: 434145.
ஆண்டுச் சந்தா — உள்நாடு ரூ. 130/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 300/-; விமானத் தபால் ரூ. 700/-.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 65/-; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 150/-; விமானத் தபால் ரூ. 350/-.

Nestlé
Nestum
baby cereal
Rice
mix with milk

# மிருதுவான போஷாக்கு

**உங்கள் குழந்தைக்கு 4 மாதங்களாகும் சமயத்தில் அவளது இயற்கை உணவான பாலுடன் எளிதில் ஜீரணிக்க உகந்த போஷாக்கு உணவான நெஸ்டத்தையும் கொடுங்கள்.**

பாலுடன் கலந்து தயாரிக்கப்பட்ட நெஸ்டம் உங்கள் குழந்தையின் மிருதுவான முதல் திட உணவாகும். ஏனெனில் இதில் குழந்தை ஆரோக்கியமாய் வளர்வதற்குரிய எல்லா போஷாக்குகளும் சமச்சீர் அளவில் அடங்கியுள்ளன. உங்கள் குழந்தையின் உணவில் வெவ்வேறு சுவையைக் கூட்ட விரும்பினால், அவ்வகை உணவுடன் நெஸ்டத்தை கலந்து கொடுங்கள். உதாரணமாய் வேக வைத்த பழங்கள், வேகவைத்து மசிய வைத்த காய்கறிகள் மற்றும் பருப்பு வகைகள்.

அரிசி சேர்த்த நெஸ்டம் போஷாக்கு நிறைந்த ஸீரியல் ஆகும். உங்கள் குழந்தை இதை எளிதில் ஜீரணிக்கும். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கு மருத்துவர்கள் சிபாரிசு செய்யும் எல்லாவித போஷாக்கும் இதில் உள்ளன. உறுதியான எலும்புகளுக்கும் பற்களுக்கும் தேவையான கால்ஷியம்; ஆரோக்கியமான ரத்தத்திற்கு தேவையான இரும்பு சத்து; பட்டு போல் பளபளக்கும் சருமத்திற்கும், ஒளிவீசும் கண்களுக்கும், நோய் எதிர்ப்பு சக்திக்கும் தேவையான வைட்டமின்களும் இதில் அடங்கியுள்ளன.

உங்கள் செல்லக் குழந்தை நெஸ்டத்துடன் சேர்ந்து வளர்வதை கவனியுங்கள்.



இலவச நெஸ்டம் செய்முறை புத்தகத்திற்கு எழுதுங்கள், போஸ்ட் பேக் 23, புது டில்லி-110016.

**எளிதில் ஜீரணிக்க வல்ல பேபி ஸீரியல்.**

## நெஸ்டம்

REGISTERED NO. M. 4392

Registered as Newspaper in Srilanka